Vol XVI No. 15

# சுதேசமித்திரன்

வாரப் பதிப்பு

13—5—'45

Price 3 ANNAS




The SWADESAMITRAN ILLUSTRATED WEEKLY







குழந்தைப்பருவத்தில்

முக்கியமான சுகத்தைத் தரும்

வுட்வார்ட் வைத்தியனின்

"கிரைப் வாட்டர்"

என்னும் மருந்துத் திராவகம்

குழந்தைக்கு

ஆரோக்யத்தைத் தரும்.

# WOODWARD'S GRIPE WATER

W. WOODWARD LTD., LONDON. ENGLAND

க்ரைப் வாட்டர் இப்பொழுது மருந்து சாமான்கள் கட்டுப்பாடு அறிக்கையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பவரின் விலை: பாட்டில் ஒன்று ரூ. 2-2-0.

சுதேசமித்திரன்
வாரப்பதிப்பு

பார்த்திப ஞு சித்திரை மீ 31உ (13-5-45)




# ஐரோப்பிய யுத்த சமாப்தி

★

ஆறு வருஷ காலமாக ஐரோப்பாவை அதிரடிக்கச் செய்த அசுர சக்திகள் மாய்ந்துவிட்டன. நாஸி ஜெர்மனி நிபந்தனை எதுவுமின்றி சரண் புகுந்துவிட்டது. ஐரோப்பிய மக்கள் இச்செய்தியால் உள்ளக் குதுகுதுப்புறுவது இயற்கை. 1939-ம் வருஷம் முதற்கொண்டு 1942-ம் வருஷம் வரையில் ஹிட்லரின் வெறி உச்சத்தை அடைந்தது. அநேகம் சிறிய நாடுகள் அச்சு நாட்டினரின் மிருகபலத்துக்கு இலக்காகி அறைந்து மடிந்தன. இவ்வெற்றிகளைக்கண்டு திளைத்த ஹிட்லர் "1918-ம் வருஷத்தில் நடந்தது போன்று இனி எக்காலத்திலும் நடக்காது" என்று தோள் கொட்டினார். ஆனால் அதிருஷ்டதேவதையின் திருஷ்டி கொஞ்சம் கொஞ்சமாகப் பெயர்ந்து நேச நாட்டினரின்பால் திரும்பிற்று. திரும்பியதுடனில்லை; திட்டமாக யுத்தப்போக்கையும் திருப்பிவிட்டது. ஜெர்மனியின் எதிர்காலம் பற்றி தாம் கொண்டிருந்த பிரமைகள் வியர்த்தம் என்பதைக் கண்ணுறு முன்பாக ஹிட்லர் காலமாகி விட்டார்.

தங்களுக்குத் தோல்வி ஏற்படுவது திண்ணம் என்றறிந்த நாஸிகள் நேசக்கட்சியினரிடையே பிளவுகளை உண்டாக்கச் செய்த முயற்சிகள் கணக்கில்லை. அமெரிக்காவிடமும், பிரிட்டனிடமும் தான் தாங்கள் சரணடையப் போவதாக அவர்கள ஆர்பரிக்கத் தலைப்பட்டனர். ரஷ்யாவைத் தனியே பிரிக்கச் செய்வதுதான் இந்தச் சூழ்ச்சியின் உட் கருத்து. ரஷ்யப் பொதுவுடமையைப் பற்றி ஹிட்லர், ஹிம்லர், கடைசியாக டோனிட்ஸ் முதலியவர்கள் கிளப்பி விட்ட போலிக் கோஷங்களைக் கண்டு நேசநாட்டினருக்கு எவ்விதமான மனமாறுதலையும் கொள்ளவில்லை. இந்த யுக்திகளெல்லாம் இறுதியாக பலிக்காதது கண்டு அட்மிரல் டோனிட்ஸ் ரீம்ஸ் நகரில் சென்ற 7-ந்தேதியன்று ஜெர்மனியின் சரணாகதி ஓலையைச் சமர்ப்பித்து விட்டார். ஜெர்மனியின் அந்நியநாட்டுமந்திரி தமது மக்களுக்கு ரேடியோ மூலம் விடுத்த செய்தியில் இனியும் தொடர்ந்து போராடுவதால் ஏற்படக்கூடிய விபரீதங்களை விளக்கியிருக்கிறார். எதிர்கால உலக நலம் வளருவதற்கான மார்க்கங்களைப்பற்றி அவர் பிரஸ்தாபித்திருப்பது எதிர்கால அனுபவத்தின் மூலமதான் தெரிய வேண்டும்.


டோனிட்ஸ்.

ஜெர்மனி வருங்காலத்தில் இனி எப்படியெலலாம் நடக்கும் என்ற பிரச்னையில் உழல்வதைக் காட்டிலும் இந்த யுத்த நிறுத்தத்தால் நேசநாட்டினர் உணர்ந்து கொள்ள வேண்டிய படிப்பினையே வெகு முக்கியம். 1918-ல் நடந்த வர்ஸேல்ஸ் ஒப்பந்தத்தின் மூலம் விதைக்கப்பட்ட விபரீத வித்துகள்தான் இந்த இரண்டாவது மகா யுத்தமாக முளைத்தது. பிறநாட்டின் மீது ஆதிக்கம் செலுத்தி, சுரண்டலில் ஈடுபடுவதால் ஏற்படக்கூடிய பலன்களை கண்கூடாகக் கண்ட பின்னரும் அதேமுறையைநீடிப்பது 3-வது யுத்தத்துக்கு அஸ்திவாரம் போடுவதாக ஆகும். போலந்து பிரச்னையொன்றே இதை இப்போது விளக்கப்

—அடுத்த பக்கம்

## ஜப்பானுடன் யுத்தம்

மேற்குப் போர் முனையில் யுத்தம் முடிந்துவிட்டது. அடுத்தபடியாக, உலகின் திருஷ்டியெல்லாம் இப்போது ஜப்பானுடன் நடக்கும் போராட்டத்தில் திரும்பியிருக்கிறது. இப்போராட்டம் இன்னும் இரண்டரை வருஷ காலம் நீடிக்கக்கூடுமென மார்ஷல் சியாங்கெய் ஷேக்கின் மாஜிக் காரியதரிசி ஒருவர் அறிவிக்கிறார். ஆனால் ரஷ்யாவும் ஜப்பானுடன் போர் தொடுக்குமாயின், அவ்வளவுக்கவ்வளவு யுத்தம் முன்னதாக முடியுமென்பதில் சந்தேகமில்லை. ரஷ்யா—ஜப்பான் நடு நிலைமை ஒப்பந்தத்தை ரத்து செய்ய சமீபத்தில் சோவியத் சர்க்கார் நடவடிக்கை' எடுத்துக்கொண்டது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். அவர்கள் கொடுத்துள்ள நோட்டீஸின்படி, அது அடுத்த வருஷம் ஏப்ரல் மாதத்தில் காலாவதியாகிறது. ஆனால் அதற்கு முன்பே ஜப்பானுடன் போர் தொடுக்க ரஷ்யா விரும்புமாயின் அதற்குப் போதிய காரணங்கள் தொகுப்பது சாத்தியமல்ல.

எப்படியும் இனி பிரிட்டிஷ்—அமெரிக்க பலம் முழுதும் ஜப்பான் மீது திரும்பும். ஏற்கனவே இப்பிராந்தியத்தில் எதிரி நேசப் படைகளின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பல முனைகளில் பின் வாங்கி வருவது அனைவரும் அறிந்த விஷயம். ரங்கூனை நேசத் துருப்புகள் கைப்பற்றிய பின், பர்மாவில் எஞ்சியுள்ள ஜப்பானியப் படைகளையும் விரட்டிக் கொண்டிருக்கின்றனர். இதே சமயத்தில் போர்னியோவிலும் ஒரு நேசப்படை இறங்கியிருக்கிறது. ஜப்பானுக்குத் தெற்கே சுமார் 350 மைல் தூரத்திலுள்ள ஆகினவா தீவில் கடும் போராட்டம் நடந்து வருகிறது.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

போதிய சான்று. எந்த நாட்டின் விமோசனத்தை நாடி இந்த 2-வது யுத்தம் தலை தூக்கியதோ, அப்பிரச்னை இன்னும் திருப்திகரமாகத் தீராமல் அம்பலத்தில் நிற்கிறது. ஆதிக்க ஆசையை வேரோடு கெல்லி எறிந்தாலன்றி உலகத்தில் நிலையான சமாதானம் இருக்க இடமில்லை அது ஹிட்லர்போன்ற அசுர சக்திகளை தட்டி எழுப்பி விடவே உதவி புரியும்.

---

## வல்லரசுகளின் ஆலோசனை



1943-ம் வருஷம் ஜனவரி மாதம் 14-ந்தேதியன்று ஜனாதிபதி ரூஸ்வெல்ட், சர்ச்சில், டிகால் ஆகியவர்கள் படையெடுப்புத் திட்டம் பற்றிக் கஸப்ளாங்காவில் கூடி முடிவு செய்தனர்.



மாஸ்கோவில் பிரதம மந்திரி சர்ச்சில், ஸ்டாலின், மிஸ்டர் ஹாரிமென் (அமெரிக்கா) ஆகிய மூவரும் எதிர்காலப் போர் திட்டத்தை வகுத்தனர்.

# அட்டைப் படம்



ஐரோப்பிய யுத்த அரங்கத்திலே சென்ற 11-மாதங்களுக்கு முன்பாக நேசதேசப் படையெடுப்பு துவங்கியது. நேசப்படைகளின் தலைமைத் தளபதியாக விருந்து எண்ணற்ற துருப்புகளையும் தளவாடங்களையும் வெற்றிகரமாக இயங்கச் செய்தவர் ஜெனரல் ஐஸன் ஹூவர் மேற்கு ஐரோப்பியப் போர்முனையில் நாஜிகளுக்கெதிராகப் போரிட்டு வெற்றி தேடித் தந்த இவர் 1890-ம் வருஷம் அக்டோபர் மாதம் 14 ந் தேதி பிறந்தார். 1911-ம் வருஷத்தில் அமெரிக்க ராணுவ அகாடமியில் சேர்ந்தார். 1915-ல் ராணுவத்தில் உயர் பதவி அடைந்தார் 19 6-ம் ஆண்டில் மணம் புரிந்து கொண்டார்

1920-ம் ஆண்டில் யுத்த முறைகளில் தேர்ந்தவராகி விட்டார். டாங்கிப் போராட்டத்தில் அபார ருசி கொண்டவர் 1914-18-மகா யுத்தத்தின்போது அடைந்த அனுபவங்களையெல்லாம் அவர் அடிக்கடி உன்னிப்பாக ஆராய்ந்து பார்ப்பது வழக்கம்

ஜெனரல் மக்கார்தருக்கு உகவியாக இவர் ஸ்தானம் வகித்திருக்கிறார். ஐரோப்பியப் போரை எப்படி நடத்த வேண்டுமென்பதைத் தயாரித்தவரும் இவரேதான் ராணுவப் பிரதம தளபதியாக விருந்த ஜெனரல் மார்ஷல் போராட்டப் பொறுப்பை ஐஸன் ஹூவரிடம் ஒப்படைத்தார். ஸிஸிலி நகர மீட்சியை ஜெனரல் ஐஸன் ஹூவரின் வெற்றிக்கு முதற்படியாக உருவடைந்தது. இதாலியில் தொடர்ச்சியாக நேசப் படை இறங்குவதற்கு ஆரம்பமானது இது முதற் கொண்டேதான்.

1943-ம் வருஷம் கிருஸ்மஸ் விடுமுறையின்போது ஜெனரல் ஐஸன் ஹூவர் நேசப்படையின் பிரதம தளபதியாக நியமனம் பெற்றிருப்பதாக ஜனாதிபதி ரூஸ்வெல்ட் பிரகடனம் செய்தார். அப் பொறுப்பைத் திறப்பட நிர்வகித்து நேச நாட்டவருக்கு வெற்றிமாலை சூட்டிய பெருமை ஜெனரல் ஐஸன் ஹூவரைச் சாரும். அவரது படம் இவ்வார இதழின் முதல் அட்டையில் தோன்றுகிறது.

# குதர்க்கம்

"சட்டத்தைக் கரைத்துக் குடியுங்கள்"

—வக்கீல்களுக்குப் பாட்னா மாஜிஸ்திரேட் உபதேசம்

உணவுப் பஞ்சத்தைத் தீர்ப்பதற்கு இது கடைசியாகக் கண்டுபிடிக்கப்பட்ட மாற்று போலும்!

●

திருவிடைமருதூரில் சந்தண மழை!

—தஞ்சை ஜில்லாத் தகவல்

இது கிரஸினின் மழையாகப் பொழிந்திருந்தால் எவ்வளவு விசேஷமாயிருந்திருக்கும் என்று ஏங்குகிறார் ஓர் ரேஷன் பேர்வழி!

பொய்சொல்லிப் பணம் பறித்ததாக 2 கான்ஸ்டேபிள்களுக்கு 3 வருஷம்.

—புதுடில்லி வழக்கு

நிஜம் சொல்லிப்பணம் கிடைக்காமல் போனால் வேறு என்ன தான் செய்வார்கள்?

●

வழக்குகளைத் துரிதமாகப் பைசல் செய்ய அதிகாரிகள் ஊர் ஊராகச் செல்வர்.

—எல்லைப்புற சர்க்கார் ஏற்பாடு.

ரயில் நெருக்கடி இருக்கும் நிலைமையில் ஊர் ஊராகச் செல்லுவதால் வழக்குகள் ரொம்ப அதிகரிக்கலாமென்கிறார் காலநிலை நிபுணர்.

●

ஸர் நூன் மறுபடியும் துள்ளுகிறார்!

—லண்டன் செய்தி

துள்ளிய மாடு பொதி சுமந்தாக வேண்டும்; அடியாமல் பழகிய மாடுகளின் கதி இதுதான் என்பது எப்போது தெரியும்!

---








## கொஞ்சம் பாடேன்!

மருமான்:—மாமா, கொஞ்சம் ஏதாவது பாடேன்!

மாமா:—என்னை எதற்காக இப்பொழுது பாடச் சொல்கிறாய்?

மருமான்:—நானும் பக்கத்தாத்து பங்கஜமும் வண்ணான் வண்ணாத்தி விளையாட்டு விளையாடப் போகிறோம். அதிலே கழுதை கத்த வேண்டும் என்று பங்கஜம் சொல்லுகிறாள்!

* * *

## ஆறுதல்!

சாப்பிடுபவர்:—இந்த காப்பியில் என்ன கழிநீர் வாசனை அடிக்கிறதே!

ஹோட்டல்காரன்:—தேவலை யே! ரொம்பப்பேர் நம் காப்பியில் வாசனையே கிடையாதென்றல்லவா சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

—சந்திரசேகரன், தஞ்சை.

* * *

## எப்படி முடியும்?

கச்சேரியில் உட்கார்ந்திருப்பவர்:—என்னடா தம்பி! ஏன் நீ என்னை பார்த்துக்கொண்டிருக்கிறாய்?

சிறுவன்:—நீங்கதான் எல்லா இடத்தையும் மறைத்துக்கொண்டிருக்கிறீர்களே நான் வேறு எங்கே பார்ப்பது?

—வி. கே. ஹிரண்யராவ் (கரூர்)

## எந்த இடத்தில்?

அடிபட்ட மோட்டார் ஓட்டி:—நான் இப்பொழுது எங்கிருக்கிறேன்?

நர்ஸ்:—ஏழாம் நம்பரில்!

மோட்டார் ஓட்டி:—இது ஜெயிலா ஆஸ்பத்திரியா?

* * * *

## ஆட்ட ரகசியம்!

ஒருவர்:—நீங்கள் சீட்டாட்டத்தில் ஜெயித்து விடுகிறீர்கள், குதிரைப் பந்தயத்தில் ஏன் தோற்றுவிடுகிறீர்கள்?

மற்றவர்:—சீட்டைக் குலுக்குவதைப்போல் குதிரையை குலுக்கமுடியுமா?

—பின்னவாசல் கிட்டு.

* * * *

## எந்த மிருகம்!

உபாத்தியாயர்:—டேய் கோபு, உன் செருப்புகள் எதனால் செய்யப்பட்டவை?

கோபு:—எருமையின் தோலால் செய்யப்பட்டது ஸார்.

உபாத்தியாயர்:—உனக்கு குடிக்க பால் கொடுக்கும் மிருகம் அது தானே?

கோபு:—ஆமாம் ஸார்.

உபாத்தியாயர்:— ஆகையால் உனக்கு காலுக்கு செருப்பும், குடிக்க பாலும் கொடுக்கும் மிருகம் எது?

கோபு:—என் அப்பா! ஸார்!

—எல். டி. நடராஜன், ஹைதராபாத்




## பூர்வகதை

கணைக்கால் இரும்பொறை சேர தேசத்தின் அரசன். செங்கணுன் என்பவன் சோழ நாட்டு மன்னன். இருவருக்கும் தீராத யுத்தம். அத்தி என்ற சேனுபதி சேரநாட்டு வீரன். நாட்டியக்கலையில் நிபுணன். நடனக்கலையில் தேர்ந்த மருதி என்பவளுக்கும் அத்திக்கும் காதல். இதன் காரணமாக அச்சமயத்தில் மூண்ட போர் ஒன்றில் சேர மன்னன் சோழமன்னனுல் சிறைப்படுகிருன். மருதி தொண்டிநகர் போகிருள். சோழ மன்னனின் மகன் நல்லடிக்கோன் அவளைச் சிறை செய்கிருன். தன் மகனுக்கு உறையூரில் உள்ளி விழா நடத்த ஓலையனுப்புகிருன்சோழன். இக்கட்டத்தில் சோழனதுபட்டத்து யானை மதம்பிடித்து ஓடுகிறது. ஆமிராவதி நதிக்கரையிலிருந்த அத்தி அந்த யானையை வேல்வீசி சூருடாக்குகிருன். அவன் தப்பியோடி இரும்பிடர்த்தலையார்என்ற புலவர் விடுதி சேர்கிருன். அங்கு ஆதிஎன்ற நங்கையிடம் பரிச்சயம் ஏற்படுகிறது. இதற்கிடையே குடிதண்ணீருக்குத் தவித்து சேரன் இறந்து போகிருன். பழிக்குப் பயந்து சோழனும் மரிக்கிருன். நல்லடிக்கோன் மருதியை அடையச் செய்யும் முயற்சி பாழாகிறது. அவள் அத்திக்கு அனுப்பிய ஓலையை நல்லடிக்கோன் கைப்பற்றி வேறு ஓலை அனுப்புகிருன். இரும்பிடர்த்தலையார் அத்தி, ஆதி மூவரும் காவிரிப்பூம்பட்டினத்தில் கரிகாலன் அரண்மனை சேர்கின்றனர். ஆதியின் தந்தை கரிகாலன். அங்கு நல்லடிக்கோன் அனுப்பிய ஓலையோடு தூதுவர் பிரவேசிக்கின்றனர். ஆதிக்கு நாட்டியம் பயில்வித்த அத்தியின் நடத்தையை ஓலை மூலம் அறிந்த கரிகாலன் அவனை பிரஷ்டம் செய்து வெளியேற்றுகிருன். ஆதியிடம் எவ்வளவுதூரம் சொல்லியும் அவள் அத்தி நினைப்பை விடவில்லை. கரிகாலன் சினம் உச்சத்தை அடைகிறது. ஆதியின் ஏற்பாட்டின்படி அத்தி மீண்டும் நகர் வருகிருன். சிறைப்படுத்தப்பட்ட அத்தியையும், ஆதியையும் ஒன்று சேர்க்க இருப்பிடத்தலையார் செய்யும் விசித்திர சூழ்ச்சி வேலைகள் திடுக்கிடும் நிலையை அடைகிறது. அவர் ஆதியையும் அத்தியையும் வெளியேற்றச் செய்யும் திட்டம் பிரமிக்கத்தக்க வகையில் நிறைவேறுகிறது. ஆதிபோய்விட்டாள். இத்தகவலறிந்த கரிகாலன் புலவரின் யோசனைக்கு அனுசரணையாகப் படைதிரட்ட ஆக்ஞையிடுகிருன்.

## படைகள் புறப்பாடு

### 31

புலவரும் அரசிளங்குமரர் இருவரும் மிகுந்த குதூகலத்தோடு மாளிகையை அடைந்து படைகளின் புறப்பாட்டிற்கு ஆயத்தம் செய்தார்கள். அருகில் நின்ற நாங்கூர்வேளுக்குப் புலவர் கட்டளையிட்டார்:—

"வேள், நீ இப்போது சென்று போர்ப் பறை கொட்டச் செய்து படைகளை புறப்படச் செய்; அரண்மனையின் நிலைப் படைகளைத் தவிர்த்து மற்றப்படைகள் யாவும், மதிள் புறத்துச் சதுக்கத்திலே வந்து சேர வேண்டும்; விரைவில் போய் வருக"

"இன்னும் அரை நாழிகைப் போதில் படைகள் யாவும் ஒன்று சேர்ந்து விட வேண்டும்; சிறிதும் தடை இருப்பது கூடாது. போ, விரைவில்" என்று மணக்கிள்ளியும் கட்டளையிட்டான்.

"கட்டளைப்படி ஆயத்தம் செய்து விடுகிறேன்; தங்கள் கொற்றம் வாழ்க!" என்று கூறிவிட்டு நாங்கூர்வேள் கடுகிச் சென்றான்.

அவன் மறைந்தவுடன் புலவர் களி வெறி துள்ளும் பார்வையோடு அரசிளங்குமரர்களுக்குச் சொன்னார்:—

இளங்குமரர்களே! பயம் அடையாமல் என் வார்த்தைகளுக்கு இணங்கி நடந்து கொள்ளுங்கள்! உங்கள் வாழ்க்கை உயர் நிலையை அடையும்; காஞ்சி நகர் பல்லவன் கீழ் அடங்கி விட்டது; உறையூர் நல்லடிக்கோனிடம் அடங்கியது: நீங்கள் இருவர் இருக்கிறீர்கள்! இந்நகரும் என்று கடல் கொள்ளுமோ என்ற நிலையில் உள்ளது; உங்கள் இருவருக்கு உரியதாக இரு நகரங்கள் வேண்டாமா?"—

"வேண்டும்!—உறையூரின் உரிமை வேண்டும்; காஞ்சி நகரின் உரிமையும்—" என்று இருகுமரர்களும் பேசி முடிப்பதற்குள் புலவர் கைகுவித்தார்.

"காஞ்சியைப் பெறுவது எளிதன்று; அதைப் பெறுங்காலம் இருக்கிறது. இன்று நம் கண் முன் புலப்படும் நகர் உறையூர்; தொன்று தொட்டு சோழர்குல விளக்காக விளக்கின் நிலைக்களமாக விளங்குவது உறையூர்; எவ்வாறேனும் இன்று அந்நகரை அடைந்தாக வேண்டும்; இதற்கென்றே நான் யோசித்துச் செய்த முடிவு இது! அத்தியும் ஆதியும்...சிராமலைச் சாரலில் தங்கியிருப்பர்; முன்னதாக நீங்கள் யாரேனும் ஒருவர் அங்கே இப்போதே புறப்பட்டுச் சென்று அவர்களுக்கு உணர்த்த வேண்டும்; அதனுடன் சேரநாட்டின் ஆட்சியையும் அவனுக்கு அளிப்பதாக உறுதி கூறிவிடவேண்டும்: நாம் படையுடன் புறப்பட்டு வருவதைக் கண்டு, ஒருக்கால் அவன் பயந்து ஓடிவிடுவான்! ஆதலால் முன்னதாக அவனுக்கு அறிவுறுத்திவிட்டால் நல்லது....தவிர்த்து, சிராமலையின் எல்லையில், நல்லடிக்கோனின் வீரர்கள் இருப்பர்; உண்மையை அவர்கள் அறியாமலும், அத்தி-ஆதி அவர்கள் கண்களில் அகப்படாமலும் இருக்கச் சொல்லவேண்டும்; இவ்விஷயங்கள் மிகவும் பிரதானமானவை! நடந்த பின் வருந்துவதில் பயனில்லை..."

புலவரின் யோசனையை இருவரும் ஏற்றுக்கொண்டார்கள். பெருவிறற்கிள்ளி முற்பட்டு, "புலவரே, நான் முன்னதாகப் போகிறேன்; தங்கள் கருத்துப்படியே, எல்லாம் சொல்லிவிடுகிறேன்; இக்காரியம் செய்ய வேண்டியதுதான்!' என்று கூறி எழுந்தான்.

அத்தருணம் இடி முழக்கம் போல போர்ப்பறையின் ஓசை கேட்டது; கால் நாழிகைப் போதுவரை, போர்ப்பறையின் முழக்கம் இடையறாமல் கேட்டது. அடுத்த கணமே புலவர் பெருவிறற்கிள்ளிக்குச் சொன்னார்.

"நீ, இப்போதே புறப்படு; மதில் புறத்துப் பெருஞ் சதுக்கத்தில் படைகள் சேர்ந்து கொண்டிருக்கும்; நானும் மணக்கிள்ளியும் தேரில் ஏறிக் கடுகி வருகிறோம்;...அத்தியிடம் எல்லாவற்றையும் சொல்லிவிடு"

"நான் போய்வருகிறேன்;... அத்தியிடம் சொல்கிறேன்" என்று கூறிவிட்டுத் தன் குதிரையிருக்குமிடம் சென்றான்.

அரண்மனையில் போர் முரசு முழங்குவதைக் கேட்டு நாலு புறமும் ஆரவாரம் கிளர்ந்து எழுந்தது. 'ஓய்' என்ற இரைச்சலுடன் படைகள் அலை மோதுவதென வீதிகள் வழியே பாய்ந்து சென்றன. படைகளின் ஆரவாரத்தையும், அரண்மனையிலிருந்து படைகள் புறப்பட்டுப்போவதையும் மாளிகையின் சாளரங்கள் வழியே கூர்ந்து பார்த்தார்கள் புலவரும் மணக்கிள்ளியும். அதே தருணம் படைகளின் நடுவே இருள் கிழித்தோடும் மின்னலென வெண்புரவியில் பெருவிறற்கிள்ளி பாய்ந்து சென்றான். புலவரும் குமரனும் குதூகலித்தார்கள்.

"மணக்கிள்ளி! என் சூழ்ச்சி வெற்றிபெறும்; சந்தேகம் இனி இல்லை. அதோ பார்! படைகள் என்ன மிடுக்குடன் பாய்ந்து போகின்றன! என் வாழ்வை நான் பெரிதும் சூழ்ச்சியிலேயே கழித்து விட்டேன், ஆனால் இது போன்ற பெரும் படையைக் கொண்டு போருக்குப் புறப்பட்டது ஒரே முறைதான்..."

"எப்போது?"

"கரிகாலன் அரசுரிமையில்லாமல் அல்லல்கொண்டுதிரிந்தான்" அவனைப் பகையரசர் பழிவாங்கத் தருணம் பார்த்திருந்தார்கள்: நான் மதுரையாண்ட பாண்டியன் 'கருங்கையொள்வாட்பெரும் பெயர் வழுதி' என்பானைத் துணைகொண்டு இதுபோன்ற பெரும் படையுடன் பகைவரை அழித்தேன்! நானே படைத்தலைமை ஏற்று போர் புரிந்தேன். பகையழித்தேன்! கரிகாலனுக்குச் சோழநாட்டின் முடி கவித்தேன்: ஆனால்...இன்று என் உடல் தளர்ந்து விட்டது! இப்படையைப் பார்க்கும் போது கண்கள் களிகொள்கின்றன! உள்ளத்தில் உறுதி கிளைத்து நிற்கிறது...... வெற்றிபெற ஆதாரம் கொள்கிறது என் தோள்கள்! சோழ பூமியை ஒன்றாக்க வேண்டும் என்ற எண்ணம்... அதுவும் உனக்கே உரியதாக ஆக்கவேண்டும் என்ற நினைவு!—"

புலவர் சொல்லுகையில் மணக்கிள்ளி தோள் பூரித்தான்; உளம் களித்தான்.

"புலவரே இரண்டாகப் பிளவுற்ற சோழ பூமியை ஒன்றாக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு மிகவும் உண்டு" என்றான்.

"கரிகாலனின் குமரர் இருவரில் ஒருவர், உறையூரையும், ஒருவர் புகாரையும் பெற்றால் போதுமல்லவா?"

"அதைவிட வேறு என்ன வேண்டும்? அதற்குமேல் கரிகாலனின் பரம்பரையல்லவா சோழ குலம்!" என்று புலவர் பொழிந்தார். நாங்கூர்வேள் அத்தருணம் தோன்றினான்; "வணக்கம்!...படைகள் அணி அணியாகப் போகின்றன!... தாங்கள் புறப்பட வேண்டியதுதான்" என்று தலை வணங்கினான்.

"நீ அரண்மனையில் நிலைப் படைகளை காவல் காத்திருக்க வேண்டும்; படைகளின் தலைமையை நான் ஏற்றுக்கொண்டு போகிறேன்" என்றார் புலவர்.

மாளிகையின் வெளிப் புறத்தில் யாரோ வரும் சத்தம் கேட்டது. சட்டென்று திரும்பிப் பார்த்தனர்.

"புலவரே,..."என்று கம்பீரமாகக் கூப்பிட்டுக்கொண்டு கரிகாலன் மாளிகைக்குள் புகுந்தான். புலவர் திடுக்கிட்டார். என்ன சொல்வானோ என்று. கரி



காலன் முகத்தில் துயரமும் கோபச் சின்னமும் தெரிந்தன; புலவர் அவன் முகக் குறிப்பை உணர்ந்தும் உணராதவர்போல், இள நகைசெய்தார்.

"கரிகால், ஏன் இவ்வளவு..."

"உம்மைப் பார்க்கவே வந்தேன்;...படைகள் யாவும் போகின்றனவே!— இவ்வளவும் ஓர் அற்ப மனிதனைச் சிறைப்பிடிக்க வேண்டுமா? என் மனம் வெறுப்படைகிறது! அவன் அப்படி வீரனும் அல்ல! ஒரு பெரிய நாட்டின் தலைவனும் அல்லு! அவனுக்குத் துணை புரியவர்கள் யார் இருக்கிறார்கள்? அவனையும் ஆதியையும் கவர்ந்து சென்றகள்வர் யார்? சேர நாட்டு வீரர்களா? அல்லது நம் அரண்மனையில் இருப்பவர்களேதானா! அத்தியின் நண்பர்களான, சேர சேனாபதிகளின் துணை வலியோ! ஆனால் உம்முடைய இந்தப் பெரிய ஏற்பாடு என் மனத்தைக் கலக்குகின்றது. ஒரு சிற்றரசன்-கூத்தாடுபவன்-அவனைச் சிறைப்பிடிக்க இவ்வளவு பெரிய படையா? ஆயிரம் ஆயிரமாக வில்லும் வாளும், வேலும் மின்னலிட்டுப் பின்னிச் செல்கின்ற இந்தப் பெரும்படை., ஒரு பெரிய நாட்டையே கைப்பற்ற வேண்டியதற்கு உதவும்; புலவரே, உம்முடைய எண்ணம் என்ன? நான் உம்மாலேயே அரசுபெற்றுவாழ்கிறேன்! என் திறமை நீர் அறிந்ததுதான்! நான் உம்முடைய சூழ்ச்சியில்சிக்குண்டேன்! உம்மை எதிர்க்கும் வன்மை எனக்கில்லை என்பது உண்மையே! திண்ணமாக இப்படைகளின் புறப்பாடு எதற்கு? இப்படைகளுக்கு உம்முடைய தலைமை எதற்கு? எந்தக் காரியத்தை எண்ணி இந்த ஏற்பாடு? நான் அறிய முடியவில்லையே! ஆதியின் நினைவால் என் உள்ளம் மாழ்கிவிட்டது; மாய்ந்துவிட்டது; என் செல்வக் குமரியை இழந்தேன்; இனி அவளை என்று காண்பேன்? அவளை விடுவிக்கும் எண்ணத்தோடுதான் இப்படைகள் புறப்படுகின்றனவா?" என்று கரிகாலன் வாய்மொழிந்தான்; நாத்தளர்ந்தான். புலவரின் பேச்சை எதிர் நோக்கினான்; மாளிகைக்குள் புகும் தருணம் புலவரின் பேச்சை அரைகுறையாகக் கேட்டுக்கொண்டே வந்த கரிகாலன், பெரிதும் புலவரிடம் சந்தேகம் கொண்டான். ஆனால் அவரை எதிர்க்கும் திறமையற்றவனாக நின்றான்: ஆதியின் பிரிவால் அவன் மனம் அளவுகடந்து துயருற்றிருந்தது.

கரிகாலன் பேச்சைக் கேட்டு மணக்கிள்ளி திகைத்தான். 'சூழ்ச்சி தெரிந்துவிட்டதோ' என்று மயங்கினான். ஆதியின் பிரிவால் அவன் மனம் நொந்திருப்பதையும் உணர்ந்தான். ஆனால் புலவர் சிறிதும் அஞ்சவில்லை; நகை செய்தவாறே சொன்னார்:—

"கரிகால், முன்பே நான் சொன்னேன்; அப்போதே முடிவு செய்திருந்தால் இவ்வளவுக்கு நேர்ந்திராதல்லவா? இவ்வளவு படைகளுடன் புறப்படவேண்டியும் நேர்ந்திராது தான்! இனி என்ன செய்ய முடியும்? அத்தி அற்பமானவன் அன்று"

"புலவரே, என்ன சொல்கிறீர்? முன்பே என்ன செய்ய வேண்டியது?"

"அத்திக்கு அவளைக்கொடுத்துவிட்டிருந்தால் இன்று அவனும் மதிக்கத் தக்கவனாக இருப்பான்; ஆதியின் விருப்பமும் நிறைவேறியிருக்கும்; அறிவில் முதிர்ந்த பெண் அவள்;—அவள் விரும்பித் துணிந்த காதலனை அடைந்துவிட்டாள்! ஊழ்வினை அந்தக் காதலர்க்குத் துணை செய்தது; இப்போதும் அவ்விருவரையும் பிரிக்க முடியாது அப்பனே!—ஆனால் உன் கண்களுக்கு முன்னர் அந்தக் காதலர்களைக் கொணர்ந்து நிறுத்துகிறேன்; இதில் சந்தேகமில்லை—இந்தப் பெரும் படையுடன் நான் புறப்படுவதற்குக் காரணம் வேறில்லை;—அத்தியை நான் அறிந்தது போல் யாரும் அறிய முடியாது. அவன் வீரரில் வீரன்; அறிஞரில் அறிஞன்; மானத்தில் சிறந்தவன்; மேம்பட்ட வாழ்வு கொண்டவன்; ஈடில்லாத நர்த்தனச் சிறப்புடையவன்; அழகின் நலம் எல்லாம் அமையப் பெற்றவன்! இன்பமொழியால் யாவரையும் வசீகரிக்கும் இயல்புடையவன்; சேர நாட்டுக்கே முடிமன்னனாக விளங்கப் போகிறவன்! உன் பெருமதிப்புக்கு இலக்காக விளங்க வேண்டியவன். அவனை—

ஆதியுடன், இப் பெரும் படைகொண்டு சந்திக்கப் போகிறேன்! சேர படையை...

"புலவரே, அவனைப் பெருமை தோன்ற வருணிப்பதில் நீர் எப்போதுமே பின்னடைவதில்லை: புலவரால்..."..."கரிகால், விரைவிலேயே நீ மனம் களிக்கும் செய்தியைக் கேட்கப் போகிறாய்! இன்று இப் படையின் புறப்பாட்டால் பெரும் பயன் உண்டாகப் போகிறது; இனி நாழிகை ஆகி விட்டதால் புறப்படுகிறோம்; நீ கவலையில்லாமல் இருப்பிடம் போ!... நாளைக் காலையில் நீ கேட்கப் போகும் செய்தியை..."

"புலவரே, எல்லாம் உமது மாயம்! எனக்கு ஒன்றும் புலப்படவில்லை! இனி உம்முடைய கருத்தின்படியே செய்வதில் நான் குறுக்கிட்டுப் பயனில்லை..."

புலவர் நகை செய்தார். அவர் விழிகளில் சூழ்ச்சியின் வெற்றித் திறம் பிரதிபலித்தது.

"தந்தையே, நான் போய் வருகிறேன்; ஆதி—அத்தியை மீட்டுக்கொண்டு வருகிறோம்; தாங்கள் மனம் களிக்கும் காரியங்களைத் தான் நாங்கள் செய்யப் போகிறோம்; தங்கள் கவலைக்குக் காரணம் ஒன்றும் இல்லை; போய் வருகிறோம்!" என்றான் மணக்கிள்ளி.

"போய்வா! புலவரின் சூழ்ச்சியில் உட்புகுந்து விட்ட உன்னை நான் தடுத்து என்ன பயன்? உன் விருப்பம் போல் போய்வா? ஆதியை மட்டும் நான் காண வேண்டும்; ஆனால் அந்தக் கள்வன் அத்தி மீது என் மனம் எல்லையற்ற வெறுப்புக்கொண்டிருக்கிறது..." என்று அரசன் கூறுகையில் புலவரும் மணக்கிள்ளியும் புறப்பட்டார்கள்.

"கரிகால், நீ உன்னிடம் போகலாம்; என் நோக்கம் நீ அறியாதவனல்ல! போய்வருகிறோம்" என்று கூறிவிட்டு நடந்தார். கரிகாலன் அதற்குமேல் பேசவில்லை. நாங்கூர் வேளை அழைத்துக் கொண்டு கரிகாலன் தன் மாளிகை நோக்கிச் சென்றான்.

புலவரும் மணக்கிள்ளியும் அம்மாளிகையைக் கடந்து அரண்மனை வாயிலை அடைந்தார்கள்; வாயிலில் நின்றபடியே, படைகளின் போக்கைக் கண்டார்கள்.

ஆயத்தமாக நான்கு குதிரைகள் பூட்டப் பெற்று நின்று தேர்மீது ஏறி அமர்ந்தனர் இருவரும். அடுத்த கணத்தில் அரண்மனை வாயிலைவிட்டு தேர் "கடகடகட" முழக்கிட்டுக் கடுகியது. எண்ணற்ற படைகள் அலைமேல் அலையாக எழுந்து மோதி மதிள் புறத்தை அடைத்து கொண்டிருந்தன. அரசவீதி வழியே தேர் கடுகிச் சென்றது. படைகள் முன்னே போவதையும், அதைப் பின் தொடர்ந்து மணக்கிள்ளியும் புலவரும் தேர் மீதே போவதையும் கண்டு ஜனங்கள் வியப்பு மிக்கவர்களாய்ப் பலவாறு பேசிக்கொண்டார்கள்.

அரச வீதியைக் கடந்து நகர்ப் புறத்து மதிளையும் கடந்தது படைகள்; பின்தொடர்ந்த தேரும் மதிளைக் கடந்து வெளி வாயிலை அடைந்து நின்றது. படைகள் முறையே சேனைத் தலைவர்களால் அணி வகுக்கப்பட்டு மதிள் புறத்தின் வெளியிடமெல்லாம் நிறைந்து விளங்கின, எங்கு நோக்கினும் வீரர் கூட்டம் கூட்டமாக அணி வகுத்து நின்றார்கள். படைகளின் அணி வகுப்பை, மணக்கிள்ளியும் புலவரும் பார்த்தவண்ணம் நடந்து சென்றார்கள்.

வில் தாங்கிய வீரர் கூட்டம், வாள் எடுத்த மறவர் வரிசைகள்; வேல் பிடித்த கடுந்திறல் மொய்ம்பினர் தொகுதிகள், இன்னும் பலவேறு படைகள் தாங்கிய வீரர்கள் ஆங்காங்கே பின் வரிசையில் அணிவகுத்து நின்றார்கள். அவர்களை அடுத்து முன்னதாக பாரசிகநாட்டுக் குதிரைகளில் ஈட்டியுடன் விளங்கினார்கள் வீரர்கள்; குதிரைப்படைகளின் வரிசைக்கு முன்னதாக யானைப்படைகள் நின்றன. ஒவ்வோர் யானைக்கும், மூன்று வீரர்கள் தற்காத்து வேல் தாங்கி நின்றார்கள். யானைப்படைகளின் முன் வரிசையில் தேர்ப் படைகள் அணிவகுத்து நின்றன. தேரின் முன் தட்டுக்களில் மூவர் வீரரும், இரு சகடங்களுக்கும் இரு வீரரும், பின்னே இரு வீரர்களுமாக, தேர் ஒன்றுக்கு ஏழு வீரர்கள் காத்து நின்றார்கள்; பல ஆயிரம் வீரர்களும், யானைப்படை, குதிரைப் படை, தேர்ப் படைகளும் நெடுந் தூரத்துக்குப் பரவி அணி வகுத்து நிற்பதைக் கண்ட பின், படைகள் புறப்பாட்டுக்கு ஆயத்தம் செய்தனர்; மணக்கிள்ளியும் புலவரும் தேரில் ஏறிக் கொண்டு தேர்ப் படைக்கு முன்னர், தேரைச் செலுத்திச் சென்றார்கள். புலவரின் கட்டளைப்படி படைகள் புறப்பாட்டுக்கு முரசு முழங்கியது. படைகள் ஆரவாரத்துடன் புறப்பட்டுக் கடுகின; புலவரின் தேர் அம்பெனச் சென்றது. மிகவேகமாகப் படைகள் காவிரிச் சாலையில் பாய்ந்து மேற்கு நோக்கிக் கடுகின.

காவிரியின் சாலையில் நெடுந் தூரத்துக்கு, சோழர் படை நிறைந்து, காவிரிக்கு எதிராகச் செல்லும் ஓர் ஆறு என்று சொல்லும்படி மேற்கு நோக்கிப் பரந்து சென்றது.

(தொடரும்)



# திருப்பாவை

## 9-வது பாசுரம்



அரியக்குடி ஸ்ரீ டி. ராமானுஜய்யங்கார் ஸ்வரப்படுத்தியது



தூமணி மாடத்துச்
சுற்றும் விளக்கெரியத்
தூபங் கமழத்
துயிலணைமேல் கண்வளரும்
மாமான் மகளே
மணிக்கதவந் தாள்திறவாய்
மாமீரவளை
யெழுப்பீரோ வுன்மகள்தான்
ஊமையோ வன்றிச்
செவிடோ வனந்தலோ
ஏமப் பெருந்துயில்
மந்திரப் பட்டாளோ
மாமாயன் மாதவன்
வைகுந்த னென்றென்று
நாமம் பலவும்
நவின்றேலோ ரெம்பாவாய்.

## பாசுர விளக்கம்.

[தூமணி மாடம்—சுத்தமான ரத்தினங்களால் அலங்கரிக்கப்பெற்ற மாளிகை; துயில் அணை—இங்கே மென்மையான படுக்கை; கண் வளரும்—உறங்கும்; மாமான்-அம்மான்; மாமா; மணிக் கதவம்—அழகான கதவு; தாள்—தாழ்ப்பாள்; மாமீர்—அம்மாமீ; எழுப்பீரோ – எழுப்ப மாட்டீரோ; அனந்தல்— தூக்க மயக்கம்; ஏமம்—காவல்; பெரும் துயில்—பெரும் தூக்கம்; மாமாயன்-பெரிய மாயச் செயல்களை உடைய கண்ணன்; வைகுந்தன்; வைகுண்டநாதன்; நவின்று-சொல்லி.

பஜனை செய்துகொண்டு வரும் பெண்கள் ஒரு வீட்டு வாசலில் நின்று "அம்மான் மகளே!" என்று ஒரு தோழியை அருமையாக அழைத்துத் துயில் எழுப்புகிறார்கள். அவள் பளிச்சென்று எழுந்து கதவைத் திறவாததால் "அம்மாமீ! உன் மகள் ஊமையா? செவிடா? அல்லது ஏதோ ஒரு பெரிய மந்திர நித்திரைக்கு உட்பட்டுக் கிடக்கிறாளா?" என்றெல்லாம் அந்தத் தோழியின் தாயாரைப் பரிகசிக்கிறார்கள்.

**ராகம்: மோஹனம்** **தாளம்: ஆதி**

கப கரி ஸா । ஸத தபா —— தா ஸரீ ——— கா । ரிஸ ஸத ஸா ரி ரி கா
தூ மணி மா ட —— த்துச் சுற்றும் வி—ள—— கெ———— ரி————-ய——

பத ஸ ஸ த த ப பக கரி கா— பா தா ஸ தப கப கரி
தூ—பம் க—ம—ழ—த்—து— யி ல————ணை - மே——ல்

ஸரி கா । தப கரி ஸா —
கண் வ——————ளரும் ——

ப தா த ப ப கா — ப தா ஸா । ஸ ஸா— । ரீ கரீ க ரி ஸ ஸா ஸா
மா——மா——————ன் மக — ளே——ம ணிக் க——————த——————வம்

ஸா । த த ரி ஸ ஸா த பா தா । பத ஸா ரி கா ரி ஸ ஸ ஸா । த
தா ள்——-தி————————— ற வா ய் — மா—மீ————ர்——அ——————வ———-

த ரிஸ ஸா த த ப பக———— பா த ஸா । ஸத தப———— பத தப
ளே— — — — — — — — — எ ழு ப் பீ——————— ரோ——உன்———ம——கள்

க ப கரி ஸ —
தா————ன் —

கா । ரிஸா — — ரி கா க கா கா । ரி கா பா — கப தஸ தப—பை ர் —
ஊமை— — — — — — —யோ—அ ன் றி ச் செ—வி—டோ அ——னந்————த—லோ —

க் தப கப ரீ ॥ ஸ ஸ்த ரி ஸ ஸ தப — தா ஸரி கா — ஸா ரி ஸரி கா
ஏ——மப் பெ—ரு—ம் து—— யி ———— ல் ——ம ந் தி ர ப் ப ட் டா——— ளோ

ப தா த ப ப க பா — தா த தா தப — பத ஸ தா । ஸா ।। தப தா ।। —
மா—— மா — யன — — — — மா த வ ன்— — வை கு ந் த னெ ன் றெ ன் று— —

கரி ரிஸ ஸா ஸ்த ரி ஸ ஸ தப தா — பா தா ஸ த ப பா —
நா——ம ம் ப —— ல——————————வும் நவி——— ன்றே—லோ —

பக தப கப கரி ஸரி —
ரெம்————பா—வா——ய்— (தூமணி)

**பொய்யோ!**
**மெய்யோ!!**

## நூதன வகை விமானம்

இப்போது அமெரிக்காவில் புதிதாக ஒருவகை விமானம் உற்பத்தியாகிறது. இது நடுக்கடலில் போய் தாராளமாக இறங்கி மிதந்துவிடும். அங்கிருந்து சிதறடிக்கப்பட்ட கப்பல் மாலுமிகளை ஒன்று சேர்ந்து உயிரைப் பாதுகாப்பதற்கு இது பேருதவியாயிருக்கிறதாம். விமானம் இறங்குவதற்கு அருகதையே இல்லாத தரைப்பிரதேசத்திலும் இவ்விமானம் சர்வசாதாரணமாய் போய் இறங்க முடியுமாம். கடலில் பாதுகாப்பு வேலைகளைச் செய்வதற்கும் தனியாகப் பிரிந்து போன பகுதிகளுக்கும் சரக்குகளையும், ஆட்களையும்கொண்டு போய்ச் சேர்ப்பதற்கு இவ்விமானங்கள் ரொம்ப உதவியாயிருக்கின்றன.

## ஸ்திரீகளுக்கு சம உரிமை

யு. எஸ். ல் புருஷர்களைப்போலவேஸ்திரீகளுக்கு சகல விஷயங்களிலும் சம அந்தஸ்து அளிக்கப்பட்டிருக்கிறது. அரசியலிலும்சரி, மற்றும் வாழ்க்கையிலுள்ள இதர துறைகளிலும் சரி புருஷர்களுக்கு எந்தெந்த உரிமைகள் உண்டோ அவையெல்லாம் அங்குண்டு.

---

# இறகுள்ள பாக்கு வெட்டி

'கனல்'

ஆங்கில கவி ஒருவர் கூறுகிறார். உலகெலாம் சுற்றினேன்; ஊரெலாம் திரிந்தேன்; கண்டேன் காணுதற்கு எளிதான காட்சியை. அந்த எளிதான காட்சி என்னவென்றாலோ 'புலவரின் வறுமைக் கோலம்'

எப்படி இருந்திருக்கிறது பாருங்கள் அக்காலம். புலவர் ஒருவர் வறுமைக் குன்றின் சிகரத்தில்தான் இருந்தார். வாழ்க்கையில் அவர் நுகர்ந்த இன்பங்கள் எல்லாம் துன்பங்கள் தாம்.

அறிவு அபாரம்; புலமை பெரிது. ஞானம் அகண்டமாகத் தான் இருந்தது, கற்பனை ஆகாசத்தையும் பூமியையுமே தாண்டிச் சென்றது. ஆனால் உண்ண உணவுக்கு-ஒரு படி அரிசிக்கு-'வக்கு' கிடையாது.

பரம்பரையாக பிதுர்ரார்ஜிதமாக கையில் இருந்த ஒரு சொத்து 'ஓரே ஒரு பாக்கு வெட்டி' அந்தப் பாக்குவெட்டி தான் அவருக்கு எவ்வளவு உபயோகம்!

திடீரென்று எந்தக் கள்வனோ இதை அபகரித்துக் கொண்டுவிட்டான். பாக்கு வெட்டியைக் காணவில்லை. புலவரின் மனம் மிகவும் எல்லை மீறிய கஷ்டத்தில் திண்டாடுகிறது. கடைசியாக ஒரு பாடல் அவர் திரு வாயிலிருந்து உருவடைகிறது. அந்தப் பாட்டு நமக்கு அது 'ஹாஸ்யம்' தான்.

என் அன்பான—உயரான பாக்கு வெட்டி இறகு முளைத்துப் போயிற்றே, யார் எடுத்தீர், ஆனாலும் தயவு செய்து தாருங்கள்' என்று கெஞ்சிக் கேட்கிறார் நம்மை.

"விறகு நறிக்க, கறி நறுக்க
வெண்சோற்(று) உப்புக்(கு) அடகு
[வைக்க
பிறகு பிளவு கிடைத்ததென்றால்
நாலாருகப் பிளந்துகொள்ள
பறகு பறகென்றே சொறியப்
பக்குவமாய் இருந்த பாக்குவெட்டி
இறகு முளைத்தும் போயிற்றே
எடுத்தீராயின் கொடுப்பீரே"

---

# பம்பாயில் கம்பன்

★

பி. ஸ்ரீ

சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் ராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள ஒரு முக்கியநகரத்திலே நான் கம்பன் கவிதையைப்பற்றிப் பேச நேர்ந்தது. தலைமை தாங்கியவர் தேசிய உணர்ச்சியும் தமிழ்க் காதலும் ஒருங்கே பெற்றிருந்த நிதான புத்தியுள்ள ஒரு பெரியார். என்னுடைய உத்ஸாகம் அவரையும் தொத்திக்கொண்டது.

அவர் சொன்னார்:-"வட வேங்கடம் தென்குமரி என்பது தமிழ் நாட்டு எல்லையல்லவா? தாங்கள் காவேரி தீரத்திலிருந்து கம்பனை தாமிரபர்ணி தீரத்துக்குக் கொண்டு போவது போதாது. திருப்பதியில் இன்று தமிழைக் காட்டிலும் அதிக அளவில் வேறு பாஷைகள் பேசப்படுகின்றன. அந்த மலையிலே கம்பன் கொடியை நாட்டிவிடுங்கள்; அது கன்னியாகுமரிவரையிலும் பறக்கட்டும்."

இவ்விதமாகப் பொருள்படும்படி அந்தத் தமிழ்ப் பெரியார் பேசியதும், நான் பளிச்சென்று பதில் சொன்னேன்— "ஏன் என் ஆசையைத் தாங்கள் அவ்வளவு தாரமாக குறைத்துவிட்டீர்கள்? 'இயய'வெற்பில்(இமயமலையில்) மோத—இசைகள் பாடி வாழ்வேன்! என்று ஆசைப்பட்டார் பாரதியார். என்னுடைய ஆசையோ அதற்கும் மேலே. இமயப் பிரதேசத்திலே நாட்டிய கவிதைக் கொடி கன்னியாகுமரி வரையில்மட்டுமல்ல, இலங்கைத் தீவிலும் தமிழர்கள் வசிக்கும் பர்மா, மலாய்ப் பகுதிகளிலும் பறந்துகொண்டிருந்த போதிலும் எனக்கு மனச்சாந்தியும் மகிழ்ச்சியும் இல்லை. லண்டன்மா நகரிலும் புதிய உலகமாகிய அமெரிக்காக் கண்டத்திலும் கூடக் கம்பன் கொடி பறக்கவேண்டுமென்று கூட என் உயிர் ஆசைப்படுகிறது!"

அந்தக் காலத்திலே நான் ஆங்கில பாஷையில் பிரசங்கம் செய்வதில்லை என்று ஒரு 'தேசிய விரதம்' பூண்டிருந்தேன். கம்பன் கவிதையைப் பிரசாரம் செய்வதற்காக விரத பங்கம் ஏற்பட்டாலும் பாதகமில்லை என்று. "அந்த என் நோக்கத்திற்காக ஆங்கில பாஷையையும் உபயோகித்துக் கொள்ளத் தயார்" என்று ஆவேசமாகப் பேசினேன்.

இருபத்தைந்து வருஷச் சுமை என்வயதிலே குறைந்திருந்ததால் 'இளங்கன்று பயமறியாது'என்ற ரீதியில் அப்படியெல்லாம்பேசத் துணிந்தேன். அன்று தொட்டு இன்றுவரை எத்தனையோ மாறுதல்கள்: எத்தனையோ ஆசாபங்கங்கள்! சிதைந்த கனவுகளின் சுவடுகளும் கால வெள்ளத்திலே கரைந்து போய்விட்டன ஆம், எத்தனையோ தேசியக் கனவுகளும் இலக்கியக் கனவுகளும் கண்டுகொண்டிருந்த காலம்அது. அத்தனை கனவுகளையும் கைவிட்டு 'லௌகிக அறிவு பெற்று விட்டோம்' என்று நினைத்துக் கொண்டிருக்கும் இந்த நாளிலும் கம்பனைப்பற்றிய அந்த நெடுங் கனவு மட்டும் உள்ளத்திலே பசுமையாக இருக்கிறது.

ஆகவே கல்கத்தாவிலும் பம்பாயிலும் இந்த ஆண்டிலே தமிழ்ச் சகோதரர்கள் கம்பன் திருநாள் கொண்டாடுவதாக அனுப்பிய அழைப்புக் கடிதங்கள் கிடைத்ததும் கல்கத்தாவுக்கு ஒரு செய்தி அனுப்பிவிட்டு பம்பாய்க்கு நேராகப் போய்ச் சேர்ந்தேன். கல்கத்தாவுக்கு அனுப்பியிருந்த செய்தியில் "என்னுடையநீண்டப்பேராசைபாதையிலே பம்பாயும் கல்கத்தாவும் மைல், கற்கள்தான்" என்று குறிப்பிட்டிருந்தேன். அந்தக் காலத்திலே இது சம்பந்தமாக ஏற்பட்டிருந்த மன நிலைக்கும், இப்போதுள்ள என் மன நிலைக்கும் உள்ள ஒரு வித்தியாசத்தையும் அந்தச் செய்தியில் வற்புறுத்தியிருந்தேன்.

அதாவது, "யாராவது செய்ய வேண்டும் இந்த பெருங் காரியத்தை; நாம் ஏன் செய்ய முடியாது? என்பதுதான் அந்தக்கால மனநிலை. இன்றோ, "எப்படியாவது யாராவது இந்தப் பெருங் காரியத்தை நிறைவேற்ற வேண்டியதுதான்!" என்ற எண்ணமே நிலை பெற்றுவிட்டது "நான்தான் செய்யவேண்டும்!" என்ற எண்ணம் போய்விட்டது,

இந்தக் கருத்தைக் கல்கத்தா வாசிகளான தமிழர்களுக்கு எழுத்து மூலம் தெரிவித்ததோடு பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தில் கம்பன் திருநாள் கொண்டாட்டத்திற்குத்தலைமை வகித்துச் செய்த முன்னுரைப் பிரசங்கத்திலும் பகிரங்கமாக வெளியிட்டு ஒருவாறு மனச் சாந்தி அடைய முயன்றேன். அந்த விழாக் கூட்டங்களிலே குதூகலமாய்க் கலந்து கொண்டிருந்த நவயுவர்களில் யாராவது கம்பனை நன்கு கற்று உலகமெங்கும் பிரசித்தமாக்கிவிட மாட்டார்களா?— இந்த ஆசை என்னை அறியாமலேயே பகுத்தறிவையும் மீறிக் கொண்டு வெளிப்பட்டது.

ஆண்டிலும் அனுபவத்திலும் முதிர்ந்த முதியவர்கள் என்ன நினைத்தார்களோ தெரியாது. பம்பாய் வாசிகளான தமிழ் இளைஞர்களின் முகங்களிலெல்லாம் ஒரே குதூகலம் அலையெறியக் கண்டேன். அந்தக் குதூகலம் மட்டும் ஒருவாறு செயலிலும் பரிணமிக்கக் கூடுமானால்?

* * * *

கம்பன் உலக மகா கவிகளில் ஒருவன் என்பதை எனக்கு முதல் முதல் உணர்த்திய பெரியார் ஆசிரியர் வ. வே. சு. ஐயர். தேசபக்த சிகாமணியாகிய அவர் தேசாபிமானத்தாலும் தமிழபிமானத்தாலும்தான் அப்படிச் சொல்லுகிறாரோ?— என்றுகூட ஒரு சமயம் நான் எண்ணியதுண்டு. அந்த நாளில் தமிழிலக்கியத்தைக் காட்டிலும் ஆங்கில இலக்கியமே என்னை வசீகரித்திருந்தது அதிலும் ஷேக்ஸ்பியர் என்றால் அபார மோகம்: ஷேக்ஸ்பியரின் சில நாடகங்களைத் திருப்பித் திருப்பிப் படித்துக் கொண்டிருப்பேன். ஆங்கில

இலக்கிய ரசிகர்கள் கவிதையைக் குறித்தும், கவிச் சட்டத்தைக் குறித்தும் வெளியிட்டிருக்கும் அபிப்பிராயங்களை வேத வாக்காக மதித்துப் பாராயணம் செய்துகொண்டிருந்தேன்.

'அந்த நிலையிலேதான் ஆசிரியர் வ. வே. சு. ஐயரைச் சந்திக்க நேர்ந்தது. அவருடைய தோற்றமே என்னை வசீகரித்துவிட்டது. அவரோடு சம்பாஷிப்பதே புலமை என்று தோன்றியது. அவருடைய மனோதைரியமும் புலமைத் திறமும் தியாக உணர்வும் தேச பக்திச் சிறப்பும் ஏற்கெனவே என் உள்ளத்தைக் கௌவிக்கொண்டிருந்தன. அப்பேற்பட்ட பேரறிஞர் கம்பனை தமிழ்த் தெய்வத்தின் கவிக் கிரீடம் என்றும், உலக மகா கவிகளின் கோஷ்டியில் முக்கிய ஸ்தானம் பெறக்கூடியவன் என்றும், இந்த மகா கவியின் காவியச் சிற்பம் உலகத்திற்கே ஒரு புதுமை என்றும் சொன்னபோது கம்பனை நன்ருக முறைப்படி கற்கவேண்டும் என்ற ஆசை என் உள்ளத்திலே வேரூன்றிவிட்டது. கம்பனைக் கற்று இந்தக் கவிதையின் சிறப்பியல்புகளை நாளடைவிலேதான் நான் ஒருவாறு உணரத் தொடங்கினேன். சில வருஷங்களுக்குப் பிறகுதான் ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த விருது நகரில் மேலே சொன்ன சம்பவம் நிகழ்ந்தது. கல்கத்தாவிலும் பம்பாயிலும் இந்த ஆண்டில் கம்பன் திருநாள் கொண்டாடப்படும் என்று தெரிந்ததும் அந்தச் சம்பவம் நன்ருக நினைவிற்கு வந்தது.

பம்பாயில் தமிழர்கள் சேர்ந்து வசிக்கும் பகுதியான மாதுங்காவிலே சென்றமாதம் 14, 15, 16ம் தேதிகளில்கம்பன் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தமிழ்நாட்டுக்குவெளியிலேகவிச் சக்ரவர்த்தியான கம்பன் திருநாளைக் கொண்டாடியது இது தான் முதல் தடவை. இனி, ஆசிரியர் வ. வே. சு. ஐயரின் விருப்பத்திற்கு இணங்க மேலை நாடுகளிலும் கம்பனது கவிதைச் சிறப்பைக் குறித்தும் மேதா விலாஸத்தைக் குறித்தும் தத்துப் பிரசாரம் நடைபெற வேண்டும்.

"திறமான புலமையெனில் பிற நாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்.''-(பாரதியார்)

---

# வீரணனின் தியாகம்

★

—[மாரன்]—

விக்கிரமனது இதயத்தின் மர்ம நாடியே அச்சிற்ப மண்டபம். தலையில் தாங்கும் மூடி பரந்தராஜ்யம். வீரமே உருவான பிரஜைகள் இவைகளெல்லாம் அச்சிற்ப மண்டபத்தின் முன் எங்கே என்ற பெருமிதம் அவனுக்கு. அம்மண்டபத்திற்குள் காலடி எடுத்துவைக்க வேண்டியதுதான் அவனுடைய கடமைகள் யாவும் பறந்தோடிவிடும். கலை தாகம் மிகுந்து சிற்பத்தின் நயனங்களைக் கண் பூரிக்கப் பார்த்துக்கொண்டேயிருப்பான். உண்மையில் அவன் ராஜ்யத்தில் படைவீரர்களை விட சிற்பிகளே மிகுந்திருந்தனர். விக்கிரமன் சிறந்த ரஸிகன் மட்டுமல்ல! சிற்பக் கலையில் மிகவும் தேர்ச்சியுற்றிருந்தான் கைவாள் எங்கோ மூலையில் கிடக்கும். அதற்குப்பதில் கல்லுளி அவன் கையில்யிருக்கும் ஏன்? விக்கிரமனுக்கு பெரும் புகழ் கொண்டு வந்ததே அச்சிற்ப மண்டபம்தான். மக்கள் எங்கெங்கிருந்தோ வருவார்கள் அதைப்பார்க்க அவ்வழியாக ஓவியங்கள் உள்ளத்தின் உணர்ச்சியைக் கிளரும். இதயத்தில் இன்ப அலைகள் சாரி சாரியாக மோதும்.

விக்கிரமனுக்கு வீரணனிடம் அளவற்ற பிரேமை. அவனை காணும்பொழுதெல்லாம் அவன் இதயம் மகிழ்ச்சியால் விரியும். அவனது அரசின் பெருமைக்கே மூலம் வீரணன் தானே. இளைஞன் கலையிலே ஊறி திளைந்தவன்தான். ஏன்? வீரத்திலேயும் ஊறித் திளைந்தவன். இல்லாவிடில் அப்பெரிய அரசனின் சேனாதிபதியாக இருக்க முடியுமா? தேசத்தின் பொருட்டு தன் உடலை திரணமாக மதிக்கக் கூடியவன். வீரத்துடன் கலையறிவும் இழைந்துபரிமளித்தது. அவனிடம் குடிகளின் நலனே வீரணன் காணும் கனவு. அரசனது இன்பமே அவனுடையுமின்பம். அவனும் அச்சிற்ப மண்டபத்தைத் தன் கண்களிரண்டின் கருவிழிகள் போன்று காத்து வந்தான். பின்பு அரசனிடம் இழைந்து அவன் நன் மதிப்பைப் பெற்றதில் ஆச்சரியமென்ன?

எந்தக் காரியமாக இருக்கட்டுமே? வீரணனின் அனுமதியின்றி மட்டும் அது நடவாது. விக்கிரமன் கலாவதியை தன் வாழ்க்கையில் பிணைத்துக் கொண்ட போதுகூட வீரணனின் உதவி தேவையாயிருந்தது. ஆனால் அரசனின் உள்ளம் வீரணன் செய்கையால் ஏங்கியது வீரணனது வாழ்க்கைகொடியில் மற்றொரு பெண் கொடியைப் படரவிட வேண்டுமென்ற விக்ரமனது ஆசை அவலமாயிற்று. எப்போதாவது அப்பேச்சை எடுத்துவிட்டால் வீரணனின் முகத்தில் துக்கச் சாயை படர்ந்துவிடும். கண்ணில் நீர் துளித்து பார்வைக்குத் திரையிட்டுவிடும்.

அரசு அமைதியாகச் சென்றுகொண்டிருந்தது. ஓர் சண்டை? ஓர் சச்சரவு? உண்டா? அதுதான் இல்லை. குடிகள் யாவரும்கலையில் ஒன்றினர். அரசனும் புதிதாக நாளைக்கு என்ன சிலை செய்யலாம்? எவ்விதம் மண்டபத்திற்கு அழகு சேர்க்கலாம்? என்ற கனவே கண்டு வந்தான்.

அன்றுதான்! நள்ளிரவு! பள்ளியறையில் புரண்டுகொண்டிருக்கின்றான். தூக்கமில்லை. ஏதோ சஞ்சலம். மெழுகுவர்த்தியை ஏற்றினான் கலாவின் அருகில் தான் அதைக் கொணர்ந்தான். அவள் முகச் சோதியில் அவன் கண்கள் கூசின. இயற்கை கருமை படர்ந்த அஞ்சன விழிகள் மூடியுள்ளதே ரூப எழிலாகத் தோன்றியது. அவள் கொவ்வை இதழ் மடல்போன்று வளர்ந்து முகத்தின் எழிலுக்கு எழில் சேர்த்தது. அப்புருவங்களிடையே அமைந்த அவ்வழகிய திலகம் அவள் முகக் களையை மிகைப்படுத்தியது. அவன் எண்ண அலைகள் எங்கெங்கோ பாய்ந்தன. "கற்பனைக்காக கண்ணை மூடிக் கொண்டு காத்துக்கொண்டிருக்கிறார்கள். எழிலமைந்த ஓர் சித்திரத்திற்காக ஏன் நானும் தான் காத்துக் கொண்டிருக்கிறேன். இதோ இருக்கிறதே. இந்நடமாடும் சித்திரம். இக்களை முகத்தைக் கல்லில் வரைந்தாலென்ன?" என்ற எண்ணங்கள் அவன் இதயத்தை அலைத்தன. "ஆம். வீரணனும் உதவுவான். இவ்வழகின் பிம்பத்தை கல்லில் வரையப் போகிறேன்" என்ற தீர்மானத்துடன் படுக்கப் போனான். அதற்குள் ஏதோ சட்தம் கேட்டுத் துணுக்குற்றான். "யார் இந்த நடுநிசியில் என்னை அழைப்பது?" என்று கொண்டே அறையை விட்டு வெளியே வந்தான். காவலாளிகள் நால்வர் உடல் பதறிக் கொண்டு நின்று கொண்டிருந்தனர். ஆம்! அச்செய்தி பேரிடி போன்று விழுந்தது அவனுக்கு. "சிற்ப மண்டபத்திற்குள் புகுந்து யாரோ பாதகர்கள் அழகான சிலைகளை ஆயுதங்களால் உடைத்து சிற்பங்களை சிதைத்து ஓவியங்களை உருக்கலைந்துவிட்டார்கள்" என்ற அப்பேரிடியால் அதிர்ந்துவிட்டான் விக்கிரமன். அவன் தலை சுழன்றது. உடல் ஆடியது. "ஐயோ என் முன்னோரின் கலைச் செல்வமெல்லாம் கணத்தில் அழிந்துவிட்டதே. இன்பச் சுழியில் ஆழ்ந்து நான் கட்டிய மனக்கோட்டைத் தூள் தூளாக தகர்ந்து விட்டதே. என் நாடு கலையில் ஊறி தலையில் திகழ்ந்தது என்ற இறுமாப்பில் இடி விழுந்துவிட்டதே" என்று பொருமினான்; மறுகணம் அவன் மனதை வீரம் கவ்வியது. உம் என் கலைக்களவை சிதைத்த பொறுமைகாரர்களின் இரத்தத்தை உறிஞ்ச எனக்குத் தெரியும். உடைவாளுக்கு பெரும் தாகம் இதுதான், பார்க்கலாம் ஒருகை" என்ற எண்ணத்தால் அவன் மார்பு விரிந்தது. "பழிக்குப்பழி" என்ற வார்த்தைகள் உதிர்ந்தன அவன் வாயினின்று.

நேராக வீரணன் அறைக்குத்தான் சென்றான். இச்செய்தியை சொல்லும்பொழுது விக்கிர

Page Missing 15-16

மனது மார்பு விம்மியது. உதடு வரண்டது. உடல் பதறியது. வீரணன் அப்படியே சமைந்து விட்டான் இதைக்கேட்டு. மறு கணம் சிற்ப மண்டபம் அவர்கள் கண் திரையில் விழுந்தது. "பெற்று வளர்த்த குழந்தை! கண்ணீரால் காத்து வந்தாள் தாய். அது அலங்கோலமாய் குற்றுயிரும் கொலையுரு மாய் கிடக்கிறது. அதைப்பார்க்க தாயின்மனம் எப்படி குமுறும்?" அங்கிலையிலிருந்தான் விக்கிரமன். அழியா ஓவியங்கள் அழிந்து விட்டன. வெகு அழகான சிலைகளெல்லாம் குருரமாக சிதைக்கப்பட்டுவிட்டன.

"வீரணு இவைகளுக்கெல்லாம் காரணம் என்ன தெரியுமா? பொருமை! வீரண்! பொருமை! எந்தக் கொலைகாரனனின் சதி இது? இதற்குப் பழிக்குப் பழி வாங்கினுலொழிய என் உள்ளத்தில் எழும்பிய தீ அணையாது. எங்கே, நாளை சாயங்காலத்திற்குள் அக்கொலைக்காரனைக் கண்டு பிடிக்கவேண்டும். உம்! கையிலிருக்கும் உளிகளை மூலையில் எறியச்சொல். கத்திகளை தீட்டி வைக்கச்சொல். எங்கே வீரண், என் கோரிக்கையை நிறைவேற்று" என்று உறுமினுன் விக்கிரமன்.

ஆம்! விக்கிரமனும் சதிகாரனைக் கண்டுபிடிப்பதில் வெற்றி பெற்றுவிட்டான். வேறு யாருமல்ல! அண்டைநாட்டரசன் பிரதாபன் தான்! விக்கிரமனது புகழால் அவன் உள்ளத்தில் பொருமைக் கறைபடிந்தது. அதன் பயன்தான் ...... இது........ இவ் வஞ்சகச் செயல்!

அரசனது இரத்தம் இதைக் கேட்டதுமே கொதிப்பெடுத்தது! "உம்! சேனைகளை திரட்டு! வெள்ளியன்று தாக்குதல் ஆரம்பிக்கவேண்டும்" என்று கர்ஜித்தான் விக்கிரமன். ஏன் அதைக் கேட்டதுமே வீரணன் முகத்தில் 'குப்'என்று இரத்தம் ஏறுகிறது? எதிரியின் இரத்தத்தைப் பிழிய சமயம்வாய்ந்துளது என்று களிப்பெய்வதற்குப் பதிலாக ஏன் அப்படி அவன் அதிர்ந்து நிற்கிருன். ஆம்! அவன் மனதில் பெரும் போராட்டம் மூண்டு விட்டது. அதனுல் தயங்கினுன். "நிஜமாக.....தாக்குதல்... ஆரம்பிக்கத்தான் வேண்டுமா?"என்று கூட அல்லவா அரசனைக் கேட்டு விட்டான். "என்ன வீரன்! உன் வீரத்தையெல்லாம் எங்கே பறிகொடுத்துவிட்டாய்? இதென்ன தயக்கம்? அதிசயமாயல்லவா யிருக்கிறது! என் இரு கண்களை இழந்ததுபோலல்லவாஎன்உடல் துடிக்கிறது. எனக்கு வீரம் ஊட்டுவதற்குப் பதிலாக நீ தயங்குகிருயே வீரண்! ஆரம்பித்து விடுபோரை! வஞ்சனைக்காரர்களின் இரத்தத்தில் மஞ்சனம் செய்யவேண்டும் நம் கத்திகளை!" என்று படபடத்துக் கூறினன் விக்கிரமன்.

வீரணன் மனதில் இரு பெரும் போராட்டங்கள் மூண்டு விட்டன. "தன்னையே நம்பி தன்னுயிருக்குயிராய் இருக்கும் மன்னனின் கோரிக்கையை ஈடேற்றுவதாக அன்றி அங்கு போய்...ஒரு நாள் தன் உயிருடன் ஒன்றி தன்பால் அளவற்ற பிரேமை கொண்ட ஓர் இதயம் சிதறும்படியான காரியத்தைச் செய்வதா என்ற எண்ணங்கள் புரண்டெழுந்தன அவன் மனதில். அதை எவ்விதம் அறிவான் விக்கிரமன்?

கடைசியில் எவ்விதமோ அவன் மனதில் திடம் பாய்ந்தது. படைகளைத் திரட்டினுன். அவனது அறை கூவலுக்குப் பேராதரவு இருந்தது. ஒவ்வொருவரும் இரத்தக் கொதிப்பெடுத்து எழுந்தனர் அவர்களுக்கு வீர ஆரவாரம்காதைப் பிய்த்தது. அரசனின் மகிழ்ச்சி கரை புரண்டது.

இரு படைகளும் மோதின. எதிரிகளின் படைகளைப் பார்க்கும் பொழுது வீரணனின் படை வீரர்களுக்கு ஏற்பட்ட மனக் கொதிப்புக்கு ஓர் எல்லையில்லை. அழிந்த "சிற்பங்களைப் புதுப்பிக்க எங்களுக்குத் தெரியும். புதுப்பித்து விடலாம். ஆனல் காற்றில் பறக்கப் போகும் உங்கள் ஆவி உங்களுக்கு மறுபடியும் வருமா?" என்று கொண்டே ஒவ்வொருவரும் தாக்கினர் எதிரியை. தலைகள் அறுபட்டு கீழே புரண்டன. வாட்கள் ஒன்ரோடொன்று பயங்கரத் தொனியுடன் உராய்ந்தன. விக்கிரமனது படை வீரத்திற்கு அஞ்சி உயிருக்குப் பயந்து புறங்காட்டி ஓடினர் பகைவர்கள். ஒரே ஜெய கோஷம். இது வரையில் வீரணனுக்கு நிம்மதிதான். பின்பு நடக்கப் போவதை அவன் அறிந்திருந்தான். "வீரண் அதோ பார் அவ் வஞ்சகன் சேனுதிபதி! அந்தப் பாதகன் செய்த வேலை தாம் இவ்வளவும். அவன் இரத்தத்தை என் உடைவாள் சிந்தினுலொழிய என் தாபம் தணியாது" என்று கொண்டே குதிரை மீது ஏறிச் 'சர சர' வென்று முற்பட்டான் மன்னன். அப்பொழுது தான் வீரணன் முகத்தில் 'குபீர்' என்று இரத்தம் ஏறியது. அவன் இருதயமே நின்று விடும் போலிருந்தது "ஐயோ, மாங்கல்யம்" என்ற அவனை யறியாது வெளி வந்தது. இது எங்கே அரசனுக்கு கேட்கப் போகிறது! விக்கிரமன் சேனுதிபதியை நெருங்கி விட்டான். வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற அளவுக்கடங்காத வெறியுடன் அவன் கை இடையில் செருகியிருக்கும் வாளிடம் சென்றது. வீரணனுக்கு மேலும் உடல் பதறியது. குதிரையைத் தட்டி விட்டான். காற்றைக் கிழித்துக் கொண்டு பறந்தது அது, மறுகணம் அவ்விடத்திற்கு வந்து விட்டான். ஆம், அந்தக் கத்தியும் வீரணன் மார்புக்காக—அவன் உதிரத்திற்காகத்தான் காத்திருந்தது போலும். பாவம்! சேனுதிபதியின் மார்பில் அழுத்தமாக ஊடுருவி செல்ல வேண்டிய அக்கத்தியை அவன் மேல் 'சரேரென்று' விழுந்து வீரணன் தாங்கிக் கொண்டான். இரத்தம் பீறிட்டு எழுந்தது. இமைப்பொழுதில் 'தடார்'ரென்று வீரணன் குதிரை மீதிருந்து வீழ்ந்தான். விக்கிரமனது விழிகள்

ஆடவில்லை. நிலையாய் நின்று விட்டன. கை நடுங்கியது. "யார்...என் கத்தி வீரணனையா பலி கொண்டு விட்டது" என்று பதறினான். ஆம்! அந்தக் கண் தான் நன்றாக சொல்லுகின்றதே கசியும் இரத்தம் வீரணனுடைய தென்று!

பாபம்! வீரணனின் முகத்தில் மரண ரேகை படர்ந்தது! சாவு பிரதிபலிக்கின்றது! ஆனால் ஏன் இன்பக் களை நிலவுகின்றது? நா தடுமாற அரசனை அருகில் அழைத்தான்." பதறாதீர்கள். அரசே! அருகில்வாருங்கள். சீக்கிரத்தில் என் உடல் துவளுவது அடங்கி விடும். என் புலன்கள் அமைதி யுற்றுவிடும். அன்று நான் தயங்கினேன். அதன் பலன் இதுதான். என் உயிர் போகிறதே யொழிய ஒரு சிறிதும் நான் வருந்தவில்லை. இன்றய என் செய்கையால் ஓர் வாழ்வுச் சுடர் அணைவதினின்றும் காப்பாற்றி விட்டேன். இன்று உங்கள் கத்தி என் மார்பில் செல்லாது, அவன் மார்பில் பாய்ந்திருந்தால்......... .........ஒரு மாங்கல்யம் அறுந்திருக்கும்.........ஆம்! பூர்ணாவின் நெற்றிக் குங்குமம் அழியாது காப்பாற்றிச் செல்கிறேன். ஒரு நாள் நாங்களிருவரும் வாழ்க்கையில் பிணைந்து விடுவோம் என்ற எண்ணப் படகு கவிழ்ந்தது. அவளாவது மஞ்சள் கலங்காத மாங்கல்யத்துடன் இருக்கின்றாளே என்ற திருப்தியுடனிருந்தேன். அதற்கும் இன்று ஆபத்து வந்தது. ஆனால் என்னை பலி வாங்கிக் கொண்டு அந்த ஆபத்து நீங்கியது. "இனி அவரை ஒன்றும் செய்யாதீர்கள்." என்று கொண்டே கரங் குவித்தான் வீரணன். அவன் கண்கள் ஏதோ ஒரு திக்கை நோக்கின. அங்கிருந்து தான் வந்தது போன்றிருக்கிறது பாசக்கயிறு. "பூர்ணா" என்று குரலுடன் அவன் ஆவி அணைந்தது. 'வீரண்,' 'வீரண்.' என்று அரசனது தொண்டையைக் கிழித்துக்கொண்டெழும்பிய அக் குரலுக்குப் பதில் கொடுக்கும் வீரணன் அங்கு இல்லை. அலங்காரமான அானது உயிரற்ற சடலம்தான் கீழே கிடந்தது.




"கிழவி சாகக்கிடக்கிறாள் என்றால் கல்யாண வீடு மாதிரிதான்" என்று எதிர்வீட்டு அம்மணிப்பாட்டி சொல்லிப் போனதன் அர்த்தம் சிவராமனுக்குச் சரிவரப் புரிவதற்குப் பத்துநாள் பிடித்தது.

தகப்பனார் சொன்னபடி தபாலாபீஸுக்குப் போய் ஐந்தாறு கட்டுக் கார்டு வாங்கி வந்தான். தான் முன்பின் கேட்டறியாத பேர்வழிகளுக்கெல்லாம் அக்காவுக்கு உடம்பு சரியாக இல்லை என்று கடிதம் எழுதினான். ஊர் பெயர் விலாசம் எல்லாம் பட்டாபிராமய்யர் சொன்னார்,

"எதுக்காக இவாளுக்கெல்லாம் இப்போ கடிதாசு?" என்று சிவராமன் ஆச்சரியத்துடன் கேட்டான்.

"உனக்குத் தெரியாது; ஆனால் பாரு" என்றார் பட்டாபிராமய்யர். பிறகு "போய்க்கடிதங்களை எல்லாம் தபாலில் சேர்த்துவிட்டு வா!" என்றார்.

கடிதங்களைத் தபாலில்சேர்த்துவிட்டு சிவராமன் கீழ சந்நிதி வழியாக வீடு திரும்பிக்கொண்

## ஒரே குடும்பம்

★

II

டிருக்கும்போது ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த ஒரு கிழவி அவனைக் கூப்பிட்டாள். அது யார் என்று சிவராமனுக்குத் தெரியாது. ஆனால் அது ஒரு தாசி வீடு என்பது மட்டும் அவனுக்குத் தெரியும். ஏதாவது கடிதம் வந்திருக்கும், வாசித்துக் காட்டத் தன்னைக் கூப்பிடுகிறாள் என்று எண்ணிய சிவராமன் சிறிது தயக்கத்துடனேயே அந்த வீட்டு வாசற்படியேறினான். கிழவி உட்கார்ந்திருந்த திண்ணையண்டை போனான். திண்ணையில் அந்தக் கிழவியும் ரேழியில் ஒரு விசுபலகையின் மேல் நாற்பது நாற்பத்தைந்து வயதிருக்கும் ஒரு ஸ்திரீயும் உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

"உங்க பாட்டிக்கு எப்படியம்மா இருக்கு உடப்பு-என் ராசாவே!" என்று கேட்டாள் கிழவி.

"பாட்டிக்கா?..."என்று தடுமாறினான் சிவராமன். அவள் என்ன கேட்டாள் என்பதுஅவன் மனசில் உறைக்கவேயில்லை. பட்டப்பகல்தான்- எதிரேயிருந்தவர்கள் அறுபது வயசு தாண்டிய கிழவியும் நாற்பது வயசுள்ள ஒரு ஸ்திரீயும்தான். ஆனால் அது தாசி வீடு என்ற ஞாபகம் அவனைத் தடுமாற்றத்துக்கு உள்ளாக்கியது. அவன் தடுமாறித் தயங்கிக்கொண்டு நிற்கையில் உள்ளேயிருந்து அவனைக் கேலி செய்வதே போலக் கலீர் கலீர் என்று நகையொலி எழுந்தது. அந்த நகைப்பின் சொந்தக்காரி யுவதியாகத்தான் இருக்க வேணும். அழகாகவும் இருப்பாள் என்பதில் சந்தேகமில்லை என்று எண்ணினான் சிவராமன்.

அவனுடைய தயக்கத்தைக் கவனிக்காமலில்லை கிழவி.

"கும்பகோணத்து டாக்டரு வந்தாராமே உங்கக்காவுடைய உடம்பைப்பார்க்க; அக்காவுக்கு உடம்பு எப்படி இருக்குன்னு

## முன் இதழ்களில்

சிதம்பரத்தில் மாமனார் வீட்டிலிருந்த சிவராமன் புஷ்பப் பல்லக்கில் மேளக் கச்சேரி கேட்டு விட்டு விடியற் காலை வீடு திரும்பி எழுத முற்படுகிறான். அவன் மனைவி ராஜம் தடை செய்யவே அவன் மனக்கிளர்ச்சியோடு படுத்துக்கொண்ட போது கல்கத்தாவிலிருந்த தன் சித்தப்பா கிருஷ்ணஸ்வாமி சர்மாவைப்பற்றி நினைவு வருகிறது.

குறிப்பிட்ட அதே இரவில் கல்கத்தாவில் கிருஷ்ணஸ்வாமி சர்மா கிளப்பை விட்டதும் மைதானம் போகிறார். அவர் சிந்தனையில் ஆழ்ந்து விடுகிறார். அவர் தம்மரணத்தை அன்றிரவு முற்கூட்டி அறிகிறார். அவர் தம்பி வேங்கடராமய்யருக்கு குழந்தைகளுண்டு. சர்மாவின் மூத்தண்ணா பிள்ளை தான் சிவராமன் பவானி கன்னிப் பருவத்தில் கணவனை இழந்தவள். சர்மாவின் தங்கை பெண் அவள்.

கிருஷ்ணஸ்வாமி சர்மா ஸ்வாமி மலையிலிருந்த சானுப்பாட்டியின் இரண்டாவது பிள்ளை. சானுப் பாட்டிக்கு பிரஸ்தாப இரவில் அதிகாலையில் விழிப்பேற்படுகிறது. ஸ்வாமி விளக்கு அணையவே மனக்கலக்கத்தோடு அவள் அதை மீண்டும் ஏற்றி வைக்கிறாள். கல்கத்தாவில் சர்மா, "உயில் உயில்" என்று ஏதோ சொல்லி முடிக்குமுன் அவர் உயிர் பிரிந்து விடுகிறது. சென்னை பெண்கள் ஹாஸ்டலில் படித்துக் கொண்டிருந்த பவானிக்கு அதே சமயத்தில் தூக்கம் கலைகிறது. சர்மாவிடம் வந்திருந்த கடிதத்தை எடுத்துப்படிக்கிறாள்.

சர்மா இறந்து 7, 8-மாதங்களாகி விட்டன. சிவராமனும், ராஜமும் சென்னையில் குடும்பம் நடத்துகின்றனர். அங்கு பவானி வந்து சேருகிறாள். சிவராமனுக்கும், ராஜம், பவானி இவர்களுக்குமிடையே விவாதம் நடக்கிறது. ராஜத்தின் விஷயத்தில் சிவராமன் கொண்ட மனோபாவம் சரியா தவறா? பவானி விளக்கிச் சொல்லுகிறாள். கல்கத்தாவிலிருந்து வேங்கடராமய்யரும் அவரது மனைவி குழந்தைகள் ஆகியோரும் சுவாமிமலைக்குப்புறப்படுகின்றனர். சிவராமனும் ராஜமும் ஏற்கனவேயே அங்கு போய் விட்டனர். அம்மணிப் பாட்டியோடு சிவராமன் பேசுகிறான். பேச்சின் போக்கு என்ன?

---

கேட்கத்தான் கூப்பிட்டேன்" என்றாள் கிழவி.

தன் அசட்டுத் தனத்தைக் கண்டு பிறர் நகைக்கும்படியாக விடக்கூடாது என்று எண்ணியவனாக சிவராமன் சமாளித்துக் கொள்ள முயன்றான். "ஆமாம் டாக்டர் வந்தார்" என்று ஆரம்பித்து அக்கா உடம்பைப்பற்றிச் சொல்லிவிட்டு "நான் இன்னிக் காலையிலேதான் வந்தேன்" என்று முடித்தான். சொல்லி முடித்தானதும் ஒரு வினாடிகூடத் தாமதிக்காமல் அங்கிருந்து கிளம்பிவிட்டான்.

அந்தக் கிழவி அப்படி அக்காவைப்பற்றி விசாரித்ததை அவன் தன் தகப்பனாரிடம் சொன்னான். யார் அந்தக் கிழவி? அவள் அக்காவைப்பற்றி விசாரிப்பானேன்? என்று அவரைக் கேட்க விரும்பினான் சிவராமன். தானாகச் சொல்வாரோ ஒன்றும் கேட்காமலே என்று பார்த்தான். ஆனால் பட்டாபிராமய்யர் எதுவும் சொல்லவில்லை.

ஆனால் அன்று மாலையிலேயே அம்மணிப் பாட்டி மூலம் அந்தக் கிழவி யார் என்பது தெரிந்துவிட்டது. "ஏண்டி? இன்னிக்கி சவுந்தரத்தம்மா உன்னை வாயாற ராசான்னு கூப்பிட்டுப் பேசினாளாமே!" என்றாள் அம்மணிப் பாட்டி.

அந்தக்கிழவி தன்னைக் கூப்பிட்டு விசாரித்ததைத் தன் தகப்பனார் அவளிடம் சொல்லியிருக்கிறார் போலிருக்கிறது என்று எண்ணிக்கொண்டே சிவராமன் "யாரு பாட்டி அது அந்தக் கிழவி?" என்று கேட்டான்.

"உனக்குத் தெரியாதா? அவளும் ஒரு விதத்திலே உனக்குப் பாட்டி முறைதான்டா" என்றாள் அம்மணிப்பாட்டி.

சிவராமன் திருதிருவென்று விழிப்பதைக் கண்டவுடன் அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவள் சொன்னாள் "நீயும் உங்கப்பனும் என்னவோ இந்த மாதிரி விஷயங்களிலே ரொம்பவும் நல்லவளாக இருக்கேள் உங்க தாத்தா அப்படியில்லை— பெரிய ஆளு அவர்" என்றாள்.

இவ்வளவும் சொல்லிச் சிறிது நேரம் ஆன பிறகுதான் சிவராமனுக்கு விஷயம் புரிந்தது. அவனும் தன் தாத்தாவைப்பற்றி ஆதிகாலத்தில் ஏதோ கொஞ்சம் கேள்விப் பட்டதுண்டு. யாரோ ஓர் அழகியின் வலையில் சிக்கிக் கொண்டு பல நாள் வீடு கூடத் திரும்பாமல் இருந்திருக்கிறார் என்று கேள்விப் பட்டிருந்தான். முதல் தடவையாக இந்தக் கிழவியைப்பற்றி அறிவது இப்பொழுதுதான். நாற்பது ஐம்பது வருஷங்களுக்கு முன் இந்தக் கிழவி உண்மையிலேயே அழகியாகத்தான் இருந்திருப்பாள். சந்தேகம் என்ன?

அவனுடைய தாத்தாவும் தலையிலே கட்டு மயிருடன் சற்றுக் குள்ளமாக செக்கச் சிவக்க மிகவும் அழகாக இருப்பார் என்று பிறர் சொல்லிக் கேள்விப்பட்டிருந்தான் சிவராமன். நல்ல ரஸிகர் என்றும் கேள்விப்பட்டிருந்தான்.

"என்ன யோசிக்கறே?" என்று அவன் வாயைக் கிண்டினாள் அம்மணிப் பாட்டி.

"ஒன்றுமில்லை; புது உறவு ஒண்ணு தெரிஞ்சுது இன்னிக்கித் தான்" என்றான் சிவராமன்.

"சவுந்தரம் இங்கேவரதில்லையே தவிர அக்கா கோயிலுக்குப் போயிட்டு வரச்சே எல்லாம் இரண்டொரு நிமிஷம் அங்கே அவள் ஆத்திலே நின்று பேசாமே போகமாட்டா!" என்றாள் அம்மணி பாட்டி.

"ஆனால் தாத்தா உசிரோடே இருக்கச்சே?..."

அது வேறே விஷயம்! இதே சவுந்தரத்தை உங்கக்கா வையாத வசவில்லை" என்று கூறி நகைத்தாள் அம்மணிப் பாட்டி.

புது உறவினர் இன்னொருவரும் அன்றிரவே அறிமுகமானார் சிவராமனுக்கு.

இரவு எட்டு மணி சுமாருக்கு ஒரு பெரிய காரிலே வந்து இறங்கினார் அவர் வீட்டு வாசலில். மெள்ள அடிமேல் அடி எடுத்து வைத்து நடந்தே அதிகம் பழகாதவர்போல "ஏண்டி பட்டு? எனக்குச் சொல்லியனுப்பப் படாதோ! அக்காவுக்கு உடம்பு சரியாக இல்லையாமே!" என்று கேட்டுக்கொண்டே வாசப்படி தாண்டியவர் சற்று அவசரப்பட்டுத் தலை நிமிர்ந்து விட்டார். அவர் தலை படார் என்று மேல் படியில் மோதியது. "அப்பாடா" என்று தலையைப் பிடித்துக்கொண்டே உள்ளே கூடத்தில் வந்து உட்கார்ந்துகொண்டார்.

பட்டாபிராமய்யர் சிரித்துக்கொண்டே "ஒரு டம்ளர் ஜலம் சாப்பிடு. சாவித்திரி பாலனுக்கு ஒரு டம்ளர் தீர்த்தம் கொண்டு வா" என்றார்.

"டாம் பூல்னா! நிலைப்படியை சித்தே உசத்திக் கட்டப்படாது?" என்று பட்டாபிராமய்யரைக் கோபித்துக்கொண்டார் பாலன் என்று சொல்லப்பட்டவர்.

"நீ எங்கே இந்தப் பக்கம் வரப்போறென்னு கட்டாமே இறந்துட்டேன்!" என்று கேலி செய்தார் பட்டாபிராமய்யர்.

"வராம என்னடா புட்டு! ஆனால் எனக்கு என்னமோ எவ்வளவோ கவலை" என்றார் பாலன். சற்று நேரம் கழித்து "உன்னைப்பத்தி நினைக்கிறேனோ என்னவோ—சாப்பிடற போதெல்லாம் அக்காவைப் பத்தி நினைக்காமெ இருக்கிறதே கிடையாது!" என்றார்.

சாவித்திரி கொண்டு வந்து கொடுத்த ஜலத்தைச் சாப்பிட்டுவிட்டு அக்கா படுத்திருந்த இடத்தண்டை போனார். அக்காவுக்கு அப்பொழுது பிரக்ஞை இல்லை. சிறிது நேரம் பிரக்ஞை கொண்டே நின்றார். பிறகு சொன்னார். "நீயும் நானும் உறவுன்னு டாக்டரிடம் எப்பவோ சொல்லியிருந்தேன், இன்னிக்கி சாயங்காலம் கிளப்பிலே சீட்டாடிண்டிருக்கச்சே டாக்டர் அகஸ்மாத்தாகச் சொன்னார்—பாட்டிக்கு உடம்பு சரியாக இல்லை. பிழைக்கிறதே கஷ்டந்தான்னு. "பார்த்துட்டும் போகலாமென்று கிளப்லேருந்து நேரே வறேன்" என்றார் பாலன்.

"சாப்பிட்டுவிட்டுப் போகலாமே" என்றார் பட்டாபிராமய்யர்.

"இன்னிக்கி வாண்டாண்டா பட்டு-இன்னொரு நாள் வறேன். இது யாரு? உன் பிள்ளைதானே; நீ அந்த வயசிலே இருந்தமாதிரியேதான் இருக்கான். என்ன பண்ணிண்டிருக்கான்?" என்றார் பாலன்.

"சும்மாத்தான் இருக்கான்" என்றார் பட்டாபிராமய்யர்.

"இந்த வயசிலே இந்தநாளிலே சும்மா இருந்தாக் கட்டுமாடா? கும்பகோணத்திலே பிஸினஸ் மானேஜ் பண்ண எனக்கு ஒரு நம்பிக்கையான ஆசாமி தேவை. அனுப்பி வையேன்" என்றார் பாலன்.

இவ்வளவு தாராளமாகத் தனக்கு வேலை தருவதாகச் சொன்ன இந்த ஆசாமி யார் என்று ஆச்சரியத்துடன் பார்த்தான் சிவராமன். அவர் சொன்னதற்குத் தன் தந்தை அளித்த பதில் அவன் ஆச்சரியத்தை அதிகரித்தது.

"உங்கிட்ட வேலைக்கா? வேண்டாண்டப்பா வேண்டாம். தவிரவும் இருந்த வேலையை விட்டுட்டு இனிமே வேலைக்கே போகப் போறதில்லேன்னு உட்கார்ந்திருக்கான் அவன்" என்றார் பட்டாபிராமய்யர்.

"சரிதான்; அப்பாவுக்கு ஏற்ற பிள்ளைதான் போலிருக்கு. நீ உத்தியோகத்திலே சேர்ந்து பத்து வருஷம்வரையிலும் வேலையை விட்டுடுவேன் விட்டுடுவேன்னு உங்கப்பாவைப் பயமுறுத்திண்டேயிருந்தயே ஞாபகமிருக்கா? உம்புள்ளே நீ பயமுறுத்தபடி செய்யவே செய்துவிட்டான்போலிருக்கு பேஷ்! என்னதான் பண்ணிண்டிருக்கான் இப்போ!" என்றார் பாலன்.

"இன்னிக்கித் தாண்டா வந்தான். பட்டணத்திலேருந்து ஏதோ பத்திரிகைகளுக்கு எழுதிண்டிருக்கான்— புஸ்தகங்கள் எழுதிண்டிருக்கான். என்னமோ செஞ்சுண்டுதான் இருக்கான். ஆனால் எல்லாருமே உன்னைப்போல நாற்பது அடி ரோடு போட்டுக் கொடுத்துவிட்டு நாலாயிரம் லாபம் அடிக்கமுடியுமா?" என்றார் பட்டாபிராமய்யர்.

அவர் இதைச் சொன்ன பிறகுதான் சிவராமனுக்குத் தெரிந்தது—வந்திருந்தவர் யார் என்று. காண்டிராக்ட் வேலை செய்து நிறையப் பணம் பண்ணிய ஒருவர், தன்னுடைய தகப்பனாருக்கு உறவு, அத்தானோ அம்மாஞ்சியோ, ஏதோ உறவு உண்டென்று அவன் அறிந்திருந்தான். அவர்தான் இந்தப் பாலன் போலும். மிகவும் ஏழையாக இருந்தவர்—சாப்பாட்டுக்கில்லாமல் ஆரம்பகாலத்தில் அவஸ்தைப்பட்டவர். தன் முயற்சியாலேயே வெகுவாக முன்னேறி நிறையச் சம்பாதித்துவிட்டவர் என்று அவரைப்பற்றிச் சொல்லிக்கொள்வார்கள். அவர் வீட்டிலே சாப்பாடில்லாமல் அவஸ்தைப்பட்டபோதெல்லாம்-அதாவது அவருடைய இளமைப் பருவத்தில்- அக்காதான் சாதம் போட்டு வளர்த்தாள் என்றும் சிவராமன் கேள்விப்பட்டதுண்டு. அதனால்தான் அக்காவை ஞாபகம் வைத்துக்கொண்டு கேள்விப்பட்டவுடனே வந்திருந்தார் போலும்.

பாலன் எழுந்துகொண்டிருந்தார். "நான் இப்போ போய்ட்டு நாளைக்கு ராத்ரி மறுபடியும் இதே நேரத்துக்கு வறேன்" என்றார்.

"வாயேன்" என்று சொல்லிக்கொண்டே பட்டாபிராமய்யரும் எழுந்து பாலனைப் பின்தொடர்ந்து வாசல் பக்கம் போனார்.

'கும்பகோணத்திலிருந்து ஏதாவது வாங்கிக்கொண்டு வரணுமானால்சொல்லு நாளைக்கு வரப் போவாங்கிண்டுவறேன்' என்றார் பாலன்.

"என்ன வேணும்?" ஒண்ணும் வாண்டாம். நான் போறேன். இல்லாட்டா சிவராமன் போவான் அப்படி ஏதாவது அவசியமாகவேண்டியிருந்தால்" என்றார் பட்டாபிராமய்யர்.

பாலன் போன பிறகு சாவித்ரி சமையலறையிலிருந்து வெளியே வந்து சிவராமனிடம் சொன்னாள். அவனை மாமா இங்கே சாப்பிட வேறே சொல்றளேன்னு பயந்துட்டேன் நான். விஷப்பாம்புன்னா அவன்

அவனை மனுஷாள்ளே சேர்த்துக் கவேபடாதே!" என்றாள்.

இதைக் கேட்டுக்கொண்டே வாசலிலிருந்து பட்டாபிராமய்யர் திரும்பிவந்தார். "அவன் எப்படியிருந்தா நமக்கென்ன? ஏதோ அக்காவுக்கு உடம்பு சரியாயில்லேன்னு கேள்விப்பட்டு வந்தான். வந்தது பெரிசில்லையா?" என்றார்.

"ரொம்பக் கரிசனம்தான்!" என்றாள் சாவித்திரி.

"எது என்னாவானாலும் அவனுக்கு அக்காகிட்டே பிரியம் உண்டு என்பது நிஜம்தான். அவாத்துக்கும் நம்மாத்துக்கும் சண்டை. திருட்டுத்தனமா அக்கா அவனை அழைச்சு வயறு நிறையச் சாதம் போடுவா—அவாத்திலே பாதி நாள் எல்லாருமே பட்டினிதான்" என்றார் பட்டாபிராமய்யர்.

"அவாத்துக்கும் நம்மாத்துக்கும் என்ன சண்டை?" என்று விஷயம் தெரியாத சிவராமன் கேட்டான்.

"ஏதோ கோர்ட்டு வியவகாரம் சின்ன விஷயம்—கோர்ட்டுக்குப் போய் முத்திப்போய்க் குடும்பச் சண்டையாகிவிட்டது. இரண்டு குடும்பமுமே ஏழைதான்—அதிலே கோர்ட்டுக்கு வேறே போயிருக்கப்படாது. அந்தச் சண்டையெல்லாம் பாராட்டாமே அக்கா, அவாத்துக்கும் தெரியாமே, தன் மாமனார் மாமியார் யாருக்கும் தெரியாமே, தன் ஆத்துக்காரருக்குக் கூடத் தெரியாமே, ரகசியத்திலே சின்னப் பையன் பாவம் பட்டினிகிடக்கானே என்று சாப்பிட்டு வச்சு சாதம் போடுவாள். நான்தான் உடந்தை இதுக்கு. நானும் பாலனும் ஒரே வயசு..." என்று பழைய ஞாபகங்களில் ஈடுபட்டவராகச் சொன்னார் பட்டாபிராமய்யர்.

"அப்படி எல்லாம் போட்டுத்தான் பாம்பு பால் சாப்பிட்டுச் சாப்பிட்டு வளர்ந்து பிறகு பால் வைத்தவர்களையே கடிக்கறது போல, விஷ பாம்பாகி விட்டான் இவனும்" என்றாள் சாவித்திரி.

"அதுக்கென்ன பண்றது? அவாவா சுபாவம், விதி அது என்றார் பட்டாபிராமய்யர்.

"அப்படின்னா?..."

பட்டாபிராமய்யர் சொன்னார். "சாவித்திரி சொல்றது, வாஸ்தவந்தான் காலிப் பயல்தான் அவன். பணம்னா கொலை செய்யறதுக்குக் கூட அஞ்சமாட்டான்..."

சாவித்திரி குறுக்கிட்டாள். "அக்கா அக்கானுண்டு இவ்வளவு கரிசனமாக வந்தானே இன்னிக்கி-அவன் இதே அக்காவுடைய பிள்ளையின் பணத்தை வாங்கிண்டு எப்படா வாங்கிண்டேன் தரமாட்டேண்டா போடா என்று சொல்லிவிடவில்லையா?" என்றாள்

"என்னவோ அப்போ அவனுக்குத் தேவை அதிகம் இருந்தது. சிவராமனுக்குக் கதை பூராவும் தெரியாது போலிருக்கு. ஒரு சமயம் உன் பெரிய சித்தப்பா இரண்டாயிரம் ரூபாய் பணம் கொடுத்தார். அவசரமாக கடன் கேட்டானே என்று இந்தப் பாலனுக்கு பிறகு அதைத் திருப்பிக் கொடுக்கவேயில்லை அவன். கிட்டுவும் போய்க் கேட்டிருக்க மாட்டாள்; தானே கொடுக்கட்டுமேன்னு பேசாமல் இருந்திருப்பான்னு வச்சுக்கோயேன்" என்றார் பட்டாபிராமய்யர்.

"இது மாத்திரம் தானா? இன்னும் எத்தனையோ? எல்லோரும் சொல்றாளே;" என்றாள் சாவித்திரி.

"ஏழையாக இருந்து புதுசாகப் பணக்காரனாகிவிட்டவனைப் பற்றிப் பலவிதமாகத்தான் சொல்வார்கள். எல்லாரும் சொல்றத்தை நம்பிண்டிருக்கலாமா என்ன?" என்றார் பட்டாபிராமய்யர்.

"மூத்து மாமா இப்படிப்பட்டவர்னு தெரிஞ்சுண்டுதான் அந்தப் பாலனும் தைரியமாக இங்கே வரான்னு வச்சுக்கோ சிவராமா. அம்மா மட்டும் இங்கே இருந்திருக்கட்டும்-இன்னிக்கி அவன் வாசல்படி ஏறச்சேயே பிச்சுக் கட்டியிருக்க மாட்டாளா?" என்றாள் சாவித்திரி.

"அத்தை இருந்தா அது வேறே மாதிரிதான்; ஆனால் ஒண்ணு. இந்தப் பாலன் நம்மாத்துக்கு வேண்டாதவன்னு நம்மாத்து நிலைப்படிக்குக் கூடன்னா தெரிஞ்சிருக்கு சரியான போடா அவனுடைய வழுக்கைத் தலையிலே ஒண்ணு போட்டுடுத்து" என்றான் சிவராமன்.

"என்னவோ லக்ஷக்கணக்கிலே சம்பாதிச்சு விட்டான். போறான் எப்படியாவது. நமக்கென்ன? நம்ப ஒரு போதும் அவன் கிட்ட கையைக்கட்டிண்டு போய்நிக்கப்போறதில்லை. அவன் எப்படியிருந்தா நமக்கென்ன? போய் இலையைப்போடு நாழியாறது, சாப்படலாம்" என்றார் பட்டாபிராமய்யர்

இரவு தெருவாசிகளில் பலர் பட்டாபிராமய்யர் வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டு அக்காவின் உடம்பைப் பற்றி விசாரித்தார்கள். அந்தக் காலம் இந்தக் காலம் என்று பொதுவாக இரண்டொரு விஷயங்களைப்பற்றியும் பேசினார்கள். அவர்களில் சிலர் பழைய காலத்து மனுஷி என்று அக்காவைப் பற்றிச் சொன்னது மிகவும் பெருமை தருவதாக இருந்தது சிவராமனுக்கு.

இந்தக்கிராமத்துவாழ்க்கையிலேயே ஒரு விஷயம் தெளிவாகத் தெரிந்தது சிவராமனுக்கு. அந்த அக்கிரஹாரத்து ஜனங்கள் எல்லோரும்—சாதாரணமாக அவர்களுக்கிடையே என்னதான் வித்தியாசங்கள் இருந்தபோதிலும், அவர்களுடைய வாழ்க்கையின் தரத்திலே எவ்வளவுதான் ஏற்றத்தாழ்வு இருந்தபோதிலும், பரஸ்



பத்திரிகை ஆசிரியர், நேயர்கள் பிரசுரத்திற்கு அனுப்பிய விகடத்துணுக்குகளைப்படித்ததினால் ஏற்பட்ட பலன்!:

பரம் பொருமையும் தாராள மனப்பான்மை இல்லாமையும் எவ்வளவுதான் தலை தூக்கி நின்றாலும், தினசரி வாழ்க்கையிலேயே எவ்வளவோ சண்டை பூசல்கள் இருந்தாலும்—அவ்வளவு பேரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தான் என்றுபட்டது அவனுக்கு.

அன்றிரவு வந்து பேசிவிட்டுப் போனவர்கள் மூலம் சிவராமனுக்குத் தன் குடும்பத்துக் கதைகள் பல—மிகவும் அல்பமானவை தான், முக்கியமான விஷயங்கள் எதுவுமல்ல என தெரிய வந்தன. இன்ன விஷயங்கள்தான் அவை பலவும். சாதாரணமாக எந்த மனிதனும் ஞாபகத்திலே இருத்திக்கொள்ள முயலாதவை தான். ஆனால் இந்த மாதிரிச் சம்பவங்களாலும் ஞாபகங்களாலும் தான் தன் குடும்பம் பண்டைய நாட்களில், சென்ற தலைமுறைகளில் பேர் விட்டுக்கொண்டு அந்தக்கிராமத்தில் நிலைத்திருந்தது என்று சொல்லலாம் என்று சிவராமனுக்குத் தோன்றிற்று.

எல்லோரும் வந்துபோன பின் திண்ணையில் படுக்கைபோட்டு விளக்கையும் அணைத்த பிறகு சிவராமன் இந்த விஷயத்தைத் தன் சகாப்பனிடம் சொன்னான்.

பட்டாபிராமய்யர் பதில் அளித்தார்: "கிராமம், சமுதாய வாழ்க்கை என்பது நிரந்தரமான, நிலையான, உண்மையான விஷயம். எப்படியோ சிலர், பாலனைப் போன்றவர்கள், அதிலிருந்து கத்திரித்துக்கொண்டு விடுபட்டுத் தப்பிப் போய்விட்டார்கள். அவர்கள் குடும்பங்கள் கிராமத்துப் பூமியிலே வேர் விட்டிருக்கவில்லை என்று சொல்லலாம். அல்லது எவ்வளவோ காலத்துக்கு முன் வேர் விட்டு, பச்சையெல்லாம் தீய்ந்து மடித்துவிட்டது என்று சொல்லலாம்" என்றார்.

"எவ்வளவுதான் வேர் விட்டிருந்தாலும் பெரிய பெரியமரங்கள் கூட காற்றிலே அசைந்தாடி விழுந்துவிடுவதில்லையா என்ன?" என்றான் சிவராமன்.

"உண்டு. ஆனால் சாதாரணக் காற்றெல்லாம் போதாது அதற்கு. புயல், பெரும் புயல் அடித்தால் மரம் சாய்ந்துவிடும். நாகரிகம் என்ற புயல் அடித்து பல குடும்பங்களை வேரோடு கல்லிக்கொண்டு போய் நகரத்திலே சேர்த்துவிட்டது."

"தேவை என்ற புயல்தான் இதற்கு முதல்காரணமாக எனக்குப்படுகிறது" என்றான் சிவராமன்.

"முதல் காரணம், முக்கிய காரணம், ஆதிகாரணம் என்றெல்லாம் எதையும் சொல்வதற்கில்லை. எவ்வளவோ காரணங்கள், கிராமத்து வாழ்க்கை சீர்கெட்டுக் கொண்டிருக்கிறது. யாராவது சிந்திக்கப் பழகியவன், சிந்திக்கத் தைரியமுள்ளவன், நகரங்களைத்தேடி ஓடாமல் பின் தங்கி ஏதாவது செய்தால் சரிபட்டுவரும்..." என்றார் பட்டாபிராமய்யர்.

தன் வார்த்தை வலையில்தானே சிக்கிக்கொண்டு விட்ட விஷயம் சிவராமனுக்கு அப்போதுதான் விளங்கியது. அவன் என்ன பதில் சொல்வது என்றறியாமல் பேசாமல் இருந்துவிட்டான்.

பட்டாபிராமய்யர் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுச் சொன்னார்." நானும் நாகரிகத்திலே ஆசைப்பட்டேன் தேவை என்ற புயலும்தான் என்னை உலுக்கியது. நகரத்திலே இருந்துகொண்டு. மேல் படிப்பெல்லாம் படித்தேன் உத்தியோகம் என்ற சாக்கில் எவ்வளவோ ஊர்கள் சிறிதும் பெரிதுமாகப் பார்த்திருக்கிறேன். ஆனால் இந்த முப்பது முப்பத்தைந்து வருஷங்களில் என் மனம் சலித்துக்கொண்டிருந்ததே தவிர, நிலைக்கவில்லை. என்னைப்போலவே என் மனசும் அலைந்து திரிந்தது. எல்லாவற்றையும் மூட்டைக் கட்டிக் கொண்டு வேறு எங்கேயும் இனிச் செல்ல வேண்டிய அவசியமோ தேவையோ இல்லை என்கிற நிச்சயத்துடன் சுவாமிமலை சர்வமானிய அக்கிரஹாரத்தில் என் தூரத்து என் தாத்தாவுக்குத் தாத்தா, அவருக்கும் தாத்தா இப்படியாக தலைமுறை தலைமுறையாக வசித்து வந்து பண்படுத்தி காட்ட இந்தக் கிரஹத்திலே வந்து படுத்த பின் தான் எனக்கு இரவுகளில் நிம்மதியாகத் தூக்கம்வருகிறது" என்றார்.

"நிம்மதியாகத் தூக்கம் வருவதற்குக் காரணம் வயசாகிவிட்டதாக இருக்கலாம்" என்றான் சிவராமன்.

"இருக்கலாம், ஆனால் இந்த நிம்மதிக்கும் மனச் சலிப்பின்மைக்கும் காரணம் உண்மைக் காரணம் அதுவல்ல. என் இடத்திலே, கிருஹத்திலே, எனக்கென்று கடவுளாலும், என் முன்னோர்களாலும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் இடத்திலே நான் பொருந்திவிட்டேன்- அதுதான் காரணம் என்று நான் நம்புகிறேன், நம்ப விரும்புகிறேன்" என்றார் பட்டாபிராமய்யர்.

அவர் குரலில் தொனித்த ஒரு தீவிர பாவம் சிவராமனைச் சிந்தனையில் ஆழ்த்தியது.

"பட்டாபிராமய்யரே மீண்டும் மௌனத்தைக் கலைத்தார். "நீ பட்டணம் போனதையும் மற்ற விஷயங்களையும் ஞாபகத்தில்வைத்துக் கொண்டுமேலெழுந்தவாரியாக உனக்காகப் பேசுகிறேன் என்று எண்ணாதே நீ. நானே பல மாதங்களாக இதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன். ஒரே குடும்பம் என்ற வார்த்தையை இன்று நீ சொன்னவுடனே என் மனசிலே மீண்டும் அந்தச் சிந்தனைகள் கிளறி விடப்பட்டன. ஒரே குடும்பம் என்ற ஞாபகம் ஒருவனுடைய வீட்டிலே ஆரம்பிக்கிறது-அவன் வசிக்கும் தெருவை அணைத்துக் கொண்டு ஒரு கிராமம் பூராவையும் பிணைக்கும் சக்தி வாய்ந்ததாகிறது. கிராமத்திலிருந்து ஒரு சமுதாயம், பிறகு தேசம்-இப்படியாகப் பிரபஞ்சம் பூராவுமே பரவிவிட முடியும் என்று நான் சில சமயங்களில் அசட்டுத்தனமாக எண்ணியதுண்டு" என்றார்.

அவர் அப்படிக் கயிறு அறுந்ததுபோலசசட்டென்று முடித்துவிட்டதற்கு அர்த்தம் இருந்தது போலப்பட்டது சிவராமனுக்கு. தன்னைமீறிய சிந்தனைகளில் ஈடுபட்டுவிட்டோம்—அது பற்றித் தன் பிள்ளை தன்னைக் கேலி செய்வானோ என்று அவர் எண்ணுவது போல இருந்தது.

சிவராமன் சொன்னான்: 'மற்ற விஷயமெல்லாம் எப்படிப் போனால் என்ன? அக்கா உடம்பு சரியாக இல்லாமல் போனது பட்டணத்துக் கரையிலே அழுந்தி அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்த என்னைத் திருப்பி இங்கே இழுந்து வந்துவிட்டது. அந்த மட்டும் நல்லதுதானே!" என்றான்.

(தொடரும்)

# கட்டாய சம்பந்தி

‘நியாயவாதி’



நேற்று நான் என் சிநேகிதி செளந்தராவின் பெண் கல்யாணத்தை விசாரிக்கச் சென்றிருந்தேன். அக்கல்யாணம் என் தங்கை தங்கத்தின் கல்யாணம் நடைபெற்ற அதே தினத்தில் நேர்ந்ததினால் முகூர்த்தத்திற்கு என்னால் செல்ல இயலவில்லை.

நான் சென்ற சமயம் செளந்தரா ஒரு இரட்டை நாடி சரீரத்தை தாங்கிய ஒரு பெரிய மனுஷியுடன் பேசிக்கொண்டிருந்தாள். அவள் தாங்கின தேகத்தின் கனம் போதாதென்று எண்ணியோ என்னமோ ஏராளமாக வைர நகைகளின் பளுவையும் தாங்கிக்கொண்டு அதற்கு அனுகுணமான ஒரு பெரிய சரிகைக் தொட்டிப்புடவையும் உடுத்தியிருந்தாள்!

செளந்தரா அவளை எனக்கு அறிமுகப்படுத்தினாள். “இவர் புது டில்லி பிரகிருதி. இவர் கணவர் ராவ்பகதூர் கிருஷ்ணமூர்த்திக்கு மத்திய சர்க்கார் தொழில் இலாகாவில் பெரிய உத்தியோகம்” என்றாள்.

அதே சமயம் வாசலில் மோட்டார் சப்தம் கேட்டது. அதிலிருந்து ஒரு நடுத்தர வயதுள்ளவளான ஒரு ஸ்திரீ இறங்கினாள். மெல்லிய பட்டாடையை அணிந்த அவளது காதிலும் கழுத்திலும் கையிலுமே நகைகள் காணப்பட்டன.

என்னைப்போல் கல்யாணம் விசாரிக்க வந்திருந்த அவளுக்கு முகமன் கூறிய செளந்தரா, “வாருங்கள் சம்பந்தியும் சம்பந்தியும் சரியான இடத்தில் சந்தித்தீர்கள். இரண்டு பேரும் ஏககாலத்தில் கல்யாணம் விசாரிக்க வந்திருப்பது ஏற்றது தான்” என்று சொல்லிக்கொண்டே வெற்றிலை, பாக்கு, சந்தனம் பழம், குங்குமம் முதலியவற்றை வழங்கினாள்.

முதலில் இருந்த பெரிய மனுஷி அவசர அவசரமாய் எழுந்தாள். “நேரமாய்விட்டது, போய்வருகிறேன். சம்பந்தியம்மாவை நன்றாய் விசாரியுங்கள்” என்று சொல்லிக்கொண்டே அப்பால் நகர்ந்தாள். பின்னால் வந்த சம்பந்தியம்மாளின் முகம் சுமுகமாக இல்லாததை நான் அறிந்து கொண்டேன். சற்று நேரம் பேசியபின் அவள் செளந்தராவிடம் விடைபெற்றுக் கொண்டு அவ்விடத்தை விட்டு நீங்கினாள்.

அதன் பின்னர் நான் செளந்தராவை நோக்கி ஏது; சம்பந்தியம்மாள்கள் இரண்டு பேருக்கும் ராசிப்பொருத்தமில்லை போல் தோன்றுகிறதே” என்றேன். செளந்தரா சிரித்தாள். “கிருஷ்ணமூர்த்தி தம்பதிகள் கட்டாய சம்பந்திகள் என்ற பெயர் நிலைத்து விட்டது.” என்றாள்.

நான் ‘விஷயம் என்ன?” என்றேன். அவள் அது ஒரு சுவாரஸ்யமான கதை. சொல்லுகிறேன் கேள் என்று பின் வருமாறு கூறினாள்:—

“ராவ்பகதூர் கிருஷ்ணமூர்த்திக்கு பெரிய உத்தியோகம் நல்ல பதவி; அவரும் அவர் மனைவியும் ஆடம்பரமாய் வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற சாதனங்கள் உள்ளன. மேலும் அவள் சென்ற மாதம் தனது புத்திரி பத்மஜாவை பரம்பரை சீமானும் புதுக்குடி மிட்டாவின் சொந்தக்காரருமாகிய பத்மநாதனின் ஏக புத்திரன் பார்த்தசாரதிக்கு விவாகம் செய்து கொடுத்தார். சற்றுமுன் வந்தவள் பத்மநாதனின் மனைவி பங்கஜவல்லி. அவளும் பரம்பரையான புராதன குடும்பத்தில் பிறந்தவள். இவர்களுடன் ஸம்பந்தம் செய்து கொண்ட பின் கிருஷ்ணமூர்த்தி தம்பதிகள் தங்கள் அந்தஸ்தை முன்னைவிட பல மடங்கு அதிகமாய் மதிப்பிட்டுக்கொள்வதில் என்ன வியப்பு இருக்கிறது?

“ஆனால் கிருஷ்ணமூர்த்தியின் பரம்பரையோ கௌரவத்துக்கு ஏற்ற பரம்பரையல்ல. சிறுவயதில் அவர் வேறு பெயர் வகித்திருந்தார். அவர் தகப்பனார் ஒரு சமையற்காரராய் இருந்தார். அதுவும் யாரிடம் தெரியுமா? பத்மநாதனின் தகப்பனாரிடம்.

கிருஷ்ணமூர்த்தியும் பத்மநாதனும் ஏறக்குறைய சமவயதினர். கிருஷ்ணமூர்த்தியின் தாய் அவரது குழந்தைப் பருவத்திலேயே இறந்துவிட்டபடியால் அவர் பத்மநாதனின் வீட்டிலேயே வளர்ந்தார். அவருக்கு அவ்வீட்டில் இலவசச் சாப்பாடும், பள்ளிக்கூடத்தில் இலவச படிப்பும் கிடைத்தன.

கிருஷ்ணமூர்த்தி நல்ல அறிவாளி. வகுப்பில் முதல் ஸ்தானத்தை வகிப்பவன். பத்மநாபனுக்கும் படிப்புக்கும் வெகுதூரம் பணப்பெருமையும் குலப்பெருமையுமே அவரது நெஞ்சில் நிறைந்திருந்தன. அவர் கிருஷ்ணமூர்த்தியை கண்ணோடு ஒத்துப் பாரார். ஒரு வார்த்தையும் பேசார். கேவலம் ஒரு சமையற்காரரியின் மகனுடன் அவருக்கு என்ன உறவு வேண்டியிருக்கிறது?

ஒரு ஸமயம் பையன்களிடையே ஏதோ பேச்செழுந்தது “பணம் பெரிதா, புத்தி பெரிதா!” என்ற பிரச்னையில் முடிந்தது. அச்சமயம் புத்தி பெரிது என்ற கக்ஷியை எடுத்துக்கொண்டார். கிருஷ்ணமூர்த்தி. அப்பொழுது அவ்விடத்திலிருந்த பத்மநாபன் அலக்ஷியமான குரலில் “அவனுக்கு புத்தி இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதன் உதவியால் அவன் எனக்கு சமானமாய் விடுவானா?” என்றார். கடவுள் கிருபையால் கிருஷ்ணமூர்த்தி” கட்டாயம் ஆய் விடுவேன், மேலும் எனக்கு ஒருபெண்ணும், உனக்கு ஒரு பிள்ளையும் பிறக்குமாகில் என் பெண்ணை உன் பிள்ளைக்கு விவாகம் செய்து கொடுக்க நான் சொன்னதை மெய்ப்பிப்பேன்” என்றார்.

வார்த்தைகள் தடித்தன. கைகலப்பு ஏற்படும் போல் இருந்தது. நல்லவேளையாய் இருவரும் மத்தியஸ்தர்களால் விலக்கப்பட்டனர்.

அன்று அந்த ஊரை விட்டுப் போன கிருஷ்ணமூர்த்தி ஒரே தடவை தான் திரும்பி வந்தார். திடீரென்று இறந்த தனது தகப்பனாரது தகனத்துக்காக வந்த அவர் அதை முடித்துக்கொண்டு

வந்த வழியே திரும்பி விட்டார். அவர் தன் பெயரை மாற்றிக் கொண்டார். உபகார சம்பளம் பெற்ற பரீக்ஷைகள் தேறினர். ஆரம்பத்திலேயே நல்ல சம்பளமுள்ள உத்தியோகம் அவருக்குக் கிடைத்தது. வியாபாரத்தினால் புது பணம் படைத்த ஒருவர் அவருக்கு பெண் கொடுக்கமுன் வந்தார். கிருஷ்ணமூர்த்தியின் மனைவியின் பெயர் பெருந்தேவி. பெயருக்கேற்ற உருவம், ஆனால் என்ன! அவள் நல்ல வரதக்ஷிணையுடன் வந்தாள். அவளை அழைத்துக்கொண்டு அவர் புதுடில்லிக்கு உத்தியோகம் பார்க்கப்போய் விட்டார்.

பத்மநாபனுக்கும் ஏற்ற வயதில் விவாகம் நடைபெற்றது. அவரும் அவரது மனைவி பங்கஜாவும் இன்பகரமாகவே இல்லறத்தை நடத்த ஆரம்பித்தனர். அவர்களுக்கு பார்த்தஸாரதி என்ற புத்திரன் பிறந்தான்.

புது டில்லியிலுள்ள கிருஷ்ணமூர்த்தியைப்பற்றி பத்மநாபனுக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் கிருஷ்ணமூர்த்தி மற்றவரைப் பற்றி அதிக அக்கரைகொண்டிருந்தார்.

பத்மநாபனுக்கு பார்த்தஸாரதி பிறந்த பொழுது அவருக்கும் ஒரு புத்திரன் பிறந்தான், அவனுக்கு சேஷாத்திரி என்று பெயர் வைத்தார். சேஷாத்திரி பிறந்து மூன்று வருஷங்களுக்குப் பின் கிருஷ்ணமூர்த்திக்கு பத்மஜா என்ற பெண் பிறந்தாள். அவள் பிறந்தவுடனேயே அவள் பார்த்தசாரதிக்கு உரியவள் என்று அவள் தந்தை நிச்சயம் செய்து விட்டார். பாவம் இது பத்மநாபனுக்கு எப்படி தெரியும்?

குழந்தைகளுக்கு தக்க வயது வந்தது. தனது மகளது படிப்பை உத்தேசித்து கிருஷ்ணமூர்த்தி தன் சொந்த ஊரில்—பத்மநாபன் இருந்த ஊரில்—ஒரு பங்களாவை விலைக்கு வாங்கினர். அதில் தனது மனைவியையும் மகளையும் குடியேற்றினர். தான் வருடத்துக்கு ஒரு தரம் ரஜா எடுத்துக் கொண்டு அவர் புது டில்லியிலிருந்து வருவது வழக்கம். பத்து அல்லது பதினைந்து நாட்கள் அவர் அவர்களுடன் தங்கி விட்டு புது டில்லிக்குத் திரும்புவார்.



ரங்கூனில் உள்ள தங்க ஸ்தூபி இது. இதற்குக் "கோல்டன் பகோடா" எனக் கூறுவர்.

மனைவிக்கும் மகளுக்கும்வில் வேண்டிய வசதிகளை அவர் ஏற்படுத்தியிருந்தார். சமையற்காரன், வேலைக்காரர்கள், தோட்டக்காரன், மோட்டார் ஓட்டி முதலிய சிப்பந்திகளுக்குக் குறைவில்லை.

சேஷாத்திரியும் பத்மாஜாவும் மோட்டாரில்தான் பள்ளிக் கூடத்துக்குப் போய் விட்டு திரும்புவார்கள். திரும்பியவர் அவர்கள் விளையாடுவதற்காக டென்னிஸ் மேடையும் பங்களா அமைக்கப்பட்டிருந்தது. அதே கலாசாலையில் அதே வகுப்பில் படித்துக் கொண்டிருந்த பார்த்தசாரதி சேஷாத்திரிக்கு நண்பனானதில் யாதொரு ஆச்சரியமும் இல்லை. வீட்டிலோ அல்லது பள்ளியிலோ இல்லாத சமயத்தில் அவனை சேஷாத்திரி வசித்த பங்களாவில் பார்க்கலாம்.

அத்துடன் மட்டுமல்ல. அவனுக்கும் பத்மஜாவுக்கும் பரிச்சயம் ஏற்பட்டது. அது நாளடை

வில் அந்தரங்க நட்பாக மாறியது.

காலையில் சேஷாத்திரியின் மோட்டார் தயராக காத்துக் கொண்டிருக்கும். பார்த்தசாரதி வீட்டிலிருந்து வந்த பிறகுதான் அது கலாசாலைக்குப் புறப்படும். மோட்டாரை சேஷாத்திரி ஓட்டுவான். பின் ஸீட்டில் பார்த்தசாரதியும் பத்மஜாவும் அமர்ந்திருப்பார்கள்.

சாயந்திரம் கலாசாலையிலிருந்து திரும்பிய பின் பங்களாவிலுள்ள டென்னிஸ் மேடையில் சேஷாத்திரியும் அவன் தங்கையும் பார்த்தசாரதியும் மற்றும் சில நண்பர்களும் விளையாடுவார்கள். இருட்டி வெகு நேரத்துக்குப் பின்னர் தான் பார்த்தசாரதி தனது வீட்டுக்குத் திரும்புவான். இப்படி நாட்கள் சென்றன.

பார்த்தசாரதியும் சேஷாத்திரியும் பி. ஏ. ஆனர்ஸ் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார்கள். பத்மஜா பிரைவேட் இன்டர்மிடியேட் பரிக்ஷைக்குப் படித்துக் கொண்டிருந்தாள். மூவருக்கும் கணித சாஸ்திரமே பிரதானப் பாடம். அதில் 'புலி' யான பார்த்தசாரதி பத்மஜாவுக்கு புரியாத கணக்குகளை சொல்லிக் கொடுப்பான்.

அந்த வருஷம் கோடை காலத்தில் கிருஷ்ணமூர்த்தி வந்திருந்தார். அச்சமயம் யாரோ பார்த்தசாரதியை தனியே அழைத்து "நீ பத்மஜாவுடன் பழகுகிறாயே. விவாகம் செய்து கொள்ளப் போகிறாயா, என்ன? என்று வினவினார். அதற்கு அவன் சிரித்துக் கொண்டே "நான் எத்தனையோ பெண்களுடன் பழகுகிறேன். அவர்களையெல்லாம் நான் விவாகம் செய்து கொள்ளவேண்டுமா? நல்ல கேள்வி இது? என்றானாம்.

ஆனால் இது கிருஷ்ணமூர்த்தியின் காதுக்கு எட்டிவிட்டது. மறுநாள் தன் பங்களாவுக்கு வந்த பார்த்தசாரதியை அவர் அழைத்து "நீ இன்று முதல் இங்கே வரவேண்டாம். என் பெண்ணுடன் பழக வேண்டாம்" என்றார்.

பார்த்தசாரதி திகைத்து நின்றான். அவனை கூர்ந்து நோக்கிய அவர், "பத்மஜாவின் நன்மையையும் உன் நன்மையையும் உத்தேசித்தே நான் அப்படிச் சொல்லுகிறேன்" என்றார்.

பார்த்தசாரதி சிவந்த முகத்துடன், "ஏன் சார்! நான் பத்மஜாவுக்கு ஏற்ற வரன் இல்லையா?" என்று கேட்டான்.

கிருஷ்ணமூர்த்தி "நீ அவளுக்கு ஏற்ற வரன்தான். ஆனால் அவள் உனக்கு ஏற்ற பெண் என்பதை உன் பெற்றோர்கள் ஏற்றுக் கொள்ளவேண்டுமே?" என்று கேட்டார். பார்த்தசாரதி என்ன சளைத்தவனா?" என் பெற்றோரைப்பற்றி என்ன கேள்வி? நானல்லவா பத்மஜாவை விவாகம் செய்துகொள்ளப்போகிறவன்" என்று கூறிக்கொண்டே தன் சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து தான் பத்மஜாவை சாஸ்திரப்படிக்கோ அல்லது ரிஜிஸ்டர் சட்டப்படியோ விவாகம் செய்வதற்கு தயார் என்று எழுதி அவரிடம் கொடுத்தான்.

ஆனால் கிருஷ்ணமூர்த்தி அத்துடன் நிற்கவில்லை. தன்னுடைய பூர்வோத்திரத்தை எடுத்துரைத்தார். தனது தந்தை பார்த்தசாரதியின் பாட்டனின் சமையல்காரர் என்பதையும் தனக்கும் அவன் தந்தைக்கும் ஏற்பட்ட விவாதத்தையும் அவனுக்கு தெரியப்படுத்தினர். ஆனால் பார்த்தசாரதியின் மனம் மாறவில்லை. "எல்லாரும் ஒரு குலம்" என்ற பல்லவியை அவன் பாட ஆரம்பித்து விட்டான்.

பத்மநாபனுக்கு செய்தி எட்டியது. அவருக்கு இந்த சம்பந்தத்தில் கொஞ்சமும் மனம் இல்லை. ஆனால் தனது ஒரே புத்திரனுடன் பகிரங்கமாய் சண்டையிட அவர் மனம் துணியவில்லை. மிகுந்த மனக்கசப்புடன் அவர் இந்த விவாகத்துக்கு இணங்கினர்.

விவாகம் சம்பிரமமாய் நடைபெற்றது. அதைப்பற்றி ஒரு வார்த்தை.

மாங்கல்யதாரணம் நடைபெறுவதற்கு ஐந்து நிமிடங்களுக்கு முன்னர் கிருஷ்ணமூர்த்தியின் பங்களாவின் வாசலில் வரிசை வரிசையாய் மோட்டார்களும் வண்டிகளும் நின்றன. அவற்றிலிருந்து மணமகனின் பெற்றோர்களும் மற்ற சம்பந்தி ஜனங்களும் இறங்கி மணப் பந்தலில் பிரவேசித்தனர். மாங்கல்ய தாரணம் ஆனதும் அவர்கள் எழுந்து வெளியே சென்றனர். அது ஒரு ராணுவ ஒத்திகையைப் போலிருந்ததேயன்றி வேறல்ல.

ஆனால் அதைப்பற்றி "கட்டாய சம்பந்தி கிருஷ்ணமூர்த்திக்கு லட்சியமில்லை. பெண்ணின் கழுத்தில் தாலி ஏறிய பின் சம்பந்தி உறவை மற்றவர்களால் மறுக்க முடியுமா?

---




மேஷ ராசி

(அச்வனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய.)

இந்த ஒரு மாத காலத்தில் முதல் பகுதியில் மேஷ ராசிக்காரர்கள் தாங்கள் உன்னதமானது என்று கருதியுள்ள அபிலாஷையையோ அல்லது திட்டத்தையோ தற்காலிகமாக கைவிட்டுவிடும்படி நேரும். எதிர்பார்க்கும் விஷயங்களில் சற்றும் எதிர்பாராத தாமதங்கள் ஏற்படும் தொழில் துறையிலும், நிதி சம்பந்தமான விஷயங்களிலும் திடீரென்று மாறுதல்கள் ஏற்படக்கூடும். இம்மாத இரண்டாம் பகுதியிலே கிரஹங்களெல்லாம் மேஷ ராசிக்காரர்களுக்கு அனுகூலமாக விருக்கும். ஹேஷ்ய பூர்வமான அலுவல்களில் அதாவது பங்கு மார்க்கெட், பந்தயம் போன்ற இனங்களில் முதலீடுகளைப் போட நேரும். அதில் வெற்றியும் உண்டு. தேக ஆரோக்கியம் சிறிது திருப்திகரமின்றியிருக்கும் குடும்பவாழ்வில் சந்தோஷகரமான சம்பவங்கள் நிகழும். கூட்டாளியாக விருந்து தொழில் நடத்துபவர்களுக்கு லாபமுண்டு.

மே மாதம் 25, 27 தேதிகளும் ஜூன் 5 14 தேதிகளும் மேஷ ராசிக்காரர்களுக்கு அதிருஷ்ட தினங்கள்.

★

மே மாதம் 15-ந் தேதி முதல் ஜூன் 15-ந்தேதி வரை

விருஷப ராசி

(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோஹிணி, மிருக சீரிஷம் 2-ம்பாதம் முடிய.)

விருஷப ராசிக்காரர்களுக்கு இந்த மாதத்தில் குடும்பத்தில் சற்று மாறுதல் ஏற்படுவதற்கான அறிகுறிகள் காண்கின்றன. பண விஷயத்தில் இம்மாதம் அதிருஷ்டகரமாகவிருக்கும். சம்பாத்தியமிருப்பினும் வெகு துரிதமாகச் செலவு ஏற்பட்டுவிடும். நண்பர்களும், உறவினர்களும் விருந்தாளியாகவிருப்பார்கள். இம்மாத முதல் பகுதி மிக்க சாதகமாகவிருக்கும். விருஷப ராசிக்காரர்களுக்கு ஏதேனும் தேவையிருந்தால் நண்பர்கள் உதவி கிடைக்கும். வருமானம் திருப்திகரமாயருக்கும். கூட்டாளியாகச் சேர்ந்து தொழில் நடத்துவதானால் இந்த மாதம் அதற்கு ஏற்றதாகவிருக்கும். இரண்டாம் பகுதியில் ஓர் பிரயாணம் ஏற்படலாம். குடும்பத்தில் அனுகூலமான சம்பவங்கள் நிகழும். குடும்பப் பிரச்னைகள் சாதகமாகத் தீரும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வோ அல்லது பாராட்டோ கிடைக்கலாம்.

மே 18, 25, 28 தேதிகளும், ஜூன் 6, 12 தேதிகளும் இந்த ராசிக்காரர்களுக்கு நன்மை தரும்.

மிதுன ராசி

(மிருக சீரிஷம் 2-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வஸு 3-ம் பாதம் முடிய.)

மிதுன ராசிக்காரர்களுக்கு இம்மாதமெல்லாம் கிரஹங்கள் அனுகூலத்தையே தருகின்றன. அதிருஷ்டம் இவர்களுக்கு வீசியடித்துப் பரிமளிக்கும். இந்த மாதம் அதிகமாக நண்பர்கள் ஏற்படுவார்கள். தொழிலில் சுபிட்சமாக முன்னேற இடமிருக்கிறது. கிட்டிய பந்துக்களிடமிருந்து உதவி கிடைக்கும். இரண்டாம் பகுதியில் எதிர்பாராத விதமாகச் செலவு அதிகரிக்கும் ஒரு பிரயாணம் கூட ஏற்பட இடமுண்டு.

மே 25, 28, 31 தேதிகளும் ஜூன் 6, 10, 13 தேதிகளும் இந்த ராசிக்கு நல்ல நாட்கள்.

கடக ராசி

(புனர்வஸு கடைசி பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய.)

கடகராசிக்காரர்களுக்கு இந்த மாதம் சகல அம்சங்களிலும் சாதகமானது. பண விஷயத்திலும் நண்பர்கள் வட்டார விஷயத்திலும் இந்த ராசிக்காரர்கள் சந்தோஷமாயிருப்பார்கள். பெருவாரியாக உணர்ச்சிப் பெருக்கெடுக்கக்கூடிய அனுபவங்கள் இம்மாதத்தில் நிகழும். தொழிலானால் சுபிட்சமும் உத்தியோகமானால் ஊதிய உயர்வோ அல்லது பாராட்டோ கிடைக்கும். செலவு அதிகரிக்கும். சில எதிரிகள் இவர்களுக்கெதிராக வேலை செய்வார்கள். பண விஷயத்தில் முதல் பாகம் அதிர்ஷ்டகரமாயிருக்கும். கடிதப்போக்குவரத்தால் அனுகூலம் பயப்பதாகும்.

மே மாதம் 20, 22, 28 தேதிகளும் ஜூன் 4, 12, 13 தேதிகளும் இவர்களுக்கெல்லாம் அதிர்ஷ்டகரமான தினங்கள்.

ஸிம்ம ராசி

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய.)

போன மாதத்தைப்போலவே இந்த மாதமும் ஸிம்ம ராசி உடையவர்களுக்கு அதிருஷ்டகரமானதுதான். பணம் பெறுவதற்கான சந்தர்ப்பங்கள் ரொம்பத் தரமாயிருக்கின்றன. 10-வது இடத்தில் உரானஸ் இருப்பதால் ஓர் விசித்திரமான வீக்ஷண்யம் இருக்கும். லக்னத்தில் ... இருப்பதால் ஆத்மார்த்த ... பவங்களுக்கு அனுச... யிருக்கும். சிலருக்...

(பார்வை) அபிவிருத்தி அடையும். இன்னும் சிலருக்கு அவரவர்களுக்குள்ள கிரஹத்துக்கு ஏற்றபடி கவலைகள் ஏற்படக் கூடும்.

மே 28, ஜூன் 10, 13 தேதிகள் இவர்களுக்கு நலம்.

### கன்யா ராசி

(உத்திரம் 2-ம்பாதம் முதல் ஹஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய.)

இந்த மாதம் கன்யா ராசிக்காரர்களுக்கு நல்லதும் கெட்டதுமாக மாறி மாறி வருகிறது. இரண்டாம் பகுதியைப்போல முதல் பகுதி அவ்வளவு நன்ருக விராது. பண விஷயத்தில் குறிப்பிடத்தக்க அபிவிருத்தி ஏற்படும். சனி, செவ்வாய் பார்வை இருப்பதால் மன அமைதி இராது. இரண்டாம் பகுதியில் தேக சுகம் பாதகமடையும். சிலருக்கு மூத்திராசயம் சம்பந்தமான உபாதைகள் ஏற்படக்கூடும்.

கன்யா ராசிக்காரர்களுக்கு மே 25, 27, ஜூன் 12, 13 தேதிகள் அனுகூலமானவை.

### துலா ராசி

(சித்திரை, 3-ம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய.)

இந்த மாதம் துலா ராசிக்காரர்களுக்கு ரொம்பத் தரமானது இரண்டாம் பகுதி முதற்கொண்டு பண வருவாயில் மிகத் தெளிவான அபிவிருத்திகள் காணப்படும். எதிர்பாராத திரவிய லாபம் இந்த மாதத்தில் கிடைக்க வழிஉண்டு. தொண்டையில் ஏதாவது கோளாறுகள் ஏற்படக்கூடும்.

இந்த ராசிக்காரர்கள் விவாஹமானவர்களானுல் ஜூன் மாதம் 2-ந்தேதி முதல் மிகவும் சந்தோஷகரமாயிருக்கும். இன்னும் சிலருக்கு இந்த சந்தர்ப்பத்தில் கல்யாணம் ஆகவும் கூடும். பிறரோடு சச்சரவுகள், தகராறுகள் வைத்துக்கொள்ளாமல் இருக்க வேண்டும். இந்த ராசிக்காரர்களுக்குச் சொந்தமாகவுள்ள வயதில் பெரியவர்கள் யாரேனும் இந்த கட்டத்தில் கஷ்டப்படும்படி நேரும்.

மே 18, 27, 31-ந்தேதிகளும் ஜூன் 6, 15 தேதிகளும் இவர்களுக்கு அதிருஷ்டகரமானவை.

### விருச்சிக ராசி

(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய.)

இந்த ராசிக்காரர்கள் உத்தியோகத்திலிருப்பவரானுலும் சரி, அல்லது தொழில் செய்பவரானுலும் சரி அவர்களுடைய முன்னேற்ற காரியங்களில் இந்த

மாதம் எதிர்ப்புகளும் தடங்கல்களும் ஏற்படுவதாகும். வீட்டில் யாராவது நோய்வாய்ப்பட்டு படுக்கையிலிருக்கும்படியும் நேரலாம். செய்யும் அலுவல்களில் கொஞ்சம் மாறுதல் ஏற்படவும் கூடும். குடும்பத்தில் மன நிம்மதி இருக்காது. இருக்கும் வீட்டைப் பற்றி ஏதாவது கவலைகள் ஏற்படலாம். மேல் அதிகாரிகளின் ஆதரவு இந்த சமயத்தில் ஏற்படும்.

மேமாதம் 18, 25, 28, ஜூன் 4, 12, 14 தேதிகள் இந்த ராசிக்காரர்களுக்கு உகந்த நாட்கள்.

## தனுர் ராசி

(மூலம், பூரம், உத்திராடம் முதல் பாதம் முடிய.)

புதிதாக ஏதேனும் தொழில்களை ஆரம்பிப்பதானல் அதற்கு இம்மாதம் ஏற்றதல்ல. தொழில் சிக்கல்களைத் தீர்ப்பதில் கவனம் ஈடுபடலாம். குடும்பத்தில் ஏதாவது கவலைகள் இருந்துகொண்டே இருக்கும். இதனுல் சதா சுணக்கமும் ஏற்படும். கோர்ட்டு விவகாரங்களில் ஈடுபட நேர்ந்தால் அவற்றில் சாதகமான பலனை, எதிர்பார்க்கமுடியாது. சொந்த விவகாரங்கள் உறவினர்கள் வட்டாரத்தில் அடிபடும். நண்பர்களால் அதிசயிக்கும்படியான சம்பவங்கள் ஏற்படக்கூடும். புதிய நண்பர்கள் ஏற்படுவார்கள்.

மே 17, 25, 31 தேதிகளும், ஜூன் 6, 12, தேதிகளும் இவர்களுக்கு விசேஷமாயிருக்கும்.

## மகர ராசி

(உத்திராடம் 2-ம் பாதம் முகல் திருவோணம்,அவிட்டம் 2-ம் பாதம் முடிய.)

உத்தியோகத்திலும், குடும்பத்திலும் இந்த ராசிக்காரர்களுக்கு புதிய சம்பவங்கள் உருவடையும். தீவிரமான கவலைகளாலும் பல சம்பவங்களின் அதிகரிப்பினுலும் மனம் குழம்பித் தத்தளிக்கும். அவற்ருல் நிம்மதியிராது. பொறுமை, சகிப்புத் தன்மை இவை இரண்டுமே இந்த ராசிக்காரர்களுக்கு மூல மந்திரமாக

இருக்க வேண்டும். அப்படிப் பட்ட மாதம் இது.

தொழில்காரர்களுக்கு இந்த மாதம் ஏற்றது. அவ்வப்போது தொழில் சம்பந்தமான காரியங்களைக் கவனிப்பதற்கு இது பொருத்தமான சந்தர்ப்பம். தொழில் திட்டத்தைப் பொறுத்து ஏதாவது ஏமாற்றம் ஏற்படும். அதற்குத் தயாராகவிருக்க வேண்டும். பணத்துக்கும், ஓரளவு மன அமைதிக்கும் இம்மாத இரண்டாம் பகுதி சிறந்தது.

மே 17, 28, 31 ஜூன் 10, 13 தேதிகள் இவர்களுக்கு அதிருஷ்டம் தரத்தக்கவை.

## கும்ப ராசி

(அவிட்டம் 3-ம் பாதம் முதல் சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய.)

இந்த ராசிக்காரர்களெல்லாம் தங்கள் விஷயத்திலும் பக்கத்தில் இருப்பவர்கள் அலுவல்களிலும் அநேகம் காரியங்களைச் செய்யும்படியிருக்கும். சுக்கிரனும் குருவும் சாதகமான நிலைமையில் இருப்பதால் சில விசேஷ அனுகூலங்களெல்லாம் ஏற்படும். இந்த ராசிக்காரர்களிடம் பிரேமை கொண்டவர்கள் தாங்களாகவே உதவி செய்ய முன்வருவார்கள். கடிதப் போக்குவரத்தால் அனுகூலமான பலன் ஏற்படும். குடும்பத்தில் கவலைகள் ஏற்பட இடமுண்டு. தேகசுகம் சற்று பாதிக்கப்படலாம். இரண்டாம் பகுதி ரொம்ப பத்திரமாயிருக்கும். இதே கட்டத்தில் ஓர் பிரயாணமும் சம்பவிக்கலாம்.

மே மாதம் 17, 25, 26, ஜூன் 8, 10, 12 தேதிகள் இவர்களுக்கு நல்ல தினங்கள்.

## மீன ராசி

(பூரட்டாதி, 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய.)

இந்த மாதம் முதல் பாகம் இந்த ராசிக்காரர்களுக்குச் சாத...ாது. கவலைகளால் ஒரே ...யிருக்கும். தேக...கு குறைவுபடும். ...ிருந்து ஆதரவு

கிடைக்கும். நண்பர்கள், உறவினர்கள் இவர்களுடைய மனோபாவம் காரணமாக மனக் குழப்பம் ஏற்படும். இரண்டாம் பாதியில் சிறிதும் எதிர்பாராத வண்ணம் திடீரென்று ஏதேனும் வருமானம் கிடைக்கலாம். செலவு ரொம்ப அதிகமாகும். வேண்டியவர்கள் இந்த மாதம் இந்த ராசிக்காரர்களிடையே தோன்றி கவலைகளை உண்டாக்கலாம். கடன் வாங்காமல் இருப்பது கடினம். இருப்பினும் கூடுமானவரையில் இதைத் தவிர்த்துக்கொள்வது நல்லது.

மே 21, 27, 28 தேதிகளும், ஜூன் 3, 12 தேதிகளும் இவர்களுக்கு நல்லவை.

---



---



# எல்லாவற்றையும் குறைவாக உபயோகியுங்கள்

## —உங்களுக்கும் உதவி செய்துகொண்டு —இந்தியாவிற்கும் உதவுங்கள்!



காகிதத்தை மிச்சப்படுத்து. சிறு காகித துண்டுகளை உபயோகியுங்கள். பழைய கவர்களை (உறைகளைத்) திரும்ப உபயோகியுங்கள்

இந்தியாவின் ஏழைகளுக்காக உங்களது தேவைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள். சரக்குகளுக்கும் எல்லாவித சேவைகளுக்கும் பலமான நெருக்கடி இன்று ஏற்பட்டிருக்கிறது. யாருக்கும் அறவே இல்லாமல் போய்விடுவதைத் தடுக்க, ஒவ்வொருவரும் தானாகவே கொஞ்சம் தேவையைக் குறைத்துக் கொள்ளவேண்டும். இது நாட்டுப் பற்றுடையவரின் கடமை.

இப்படிப்பட்ட சிக்கனங்களை உங்களுக்குச் சாதகமாக்கிக்கொண்டு, அதன் நலன்களை அனுபவியுங்கள். தேவைகளைக் குறைக்கும் ஒவ்வொரு செயலாலும் சிறு சிறு தொகைகள் மிச்சமாகும். அந்த மிச்சங்களின் பொருட்டு சிக்கனத்தைக் கையாளுங்கள்.



விருந்துகளைக் குறையுங்கள்



ஆகாரத்தை சிக்கனப்படுத்துங்கள்—அது ஒரு தேசீய கடமை



நூலை வீணாக்காதீர்கள். அது கிடைப்பது அரிது விலையும் அதிகம்.



குழந்தைகளின் பழைய விளையாட்டுச் சாமான்களைப் பழுது பார்த்துக் கொடுங்கள். புதிதாக வாங்காதீர்கள்.



டிரங்க் டெலிபோனில் முன்னையவிடக் குறைவாகப் பேசுங்கள்



அதிவேக மிதமிஞ்சிய பாரம் ஏற்றியும் குறைவாக காற்றை அடித்தும் டயர்களைப் பாழாக்காதீர்கள்.




## உங்களுக்கு இன்றியமையாதவை தவிர பிறவற்றை வாங்காதீர்கள்

AAA 1

இந்திய அரசாங்க இ. ஐ. பி. இலாகா வெளியீ

# முத்தின் ரகசியம்

ஸாரதி

வெகுகாலத்திற்கு முந்திய விஷயம். ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு ஒரே ஒரு பையன். அவனுடைய மந்திரி பெரிய வித்வானுகவும் நல்ல புத்தி கூர்மையும் சாதுர்யமுமுடையவராகவும் இருந்தார்.

மந்திரிக்கு ஒரு பெண். அவள் நல்ல அழகுடையவளாகவும், அழகுக்கேற்ற அரிய குணங்கள் நிறையப் பெற்றவளாகவுமிருந்தாள்.

அரச குமாரன் வாலிபப் பருவத்தில் இருந்தே துஷ்டனுக இருந்தான். நாட்கள் செல்லச் செல்ல அவன் நடத்தை கெட்டுவிட்டது. அவன் குடிக்கவும், நடிக்கவும் தலைப் பட்டான்.



ஒரே பிள்ளையானதால் அரசன் அவனைக் கண்டிக்காது விட்டுவிட்டான். இஷ்டப்படி செலவு செய்வதும், இஷ்டப்படி நாடோடிகளுடன் இ...திரிவதும் தான் ராஜ ...ன் தொழிலாகஇருந் ...னுக்கு யாராவது ...ல் அது ...இருந்து அவன்

★

நண்பர்கள் அவனுக்குப் போதிப்பார்கள்.

மந்திரி அவனுக்குப் பல நல்ல புத்திமதிகளைக் கூறினார் ஆனால், அவர் முயற்சி வியர்த்தமாயிற்று. அதை ராஜகுமாரன் கொஞ்சமும் பொருட்படுத்தவில்லை. எனவே, மந்திரி மன்னனிடம் அவனைப்பற்றிக் குறை கூறினார்.

வேந்தன் தனது ஒரே புதல்வனை உயிரிலும் அதிகமாகக் கருதியதால், அக்குறையை அங்கீகரிக்காது இருந்துவிட்டான்; மந்திரியின் சொல்லைப் புறக்கணித்து விட்டான்.

நாட்கள் பல கழிந்தன. மன்னன் இறந்து போனுன். மைந்தன் மகுடதாரியாய் சிம்மாசன மேறினுன்.

அவ்வளவு தான்! மந்திரி சபையில் மாறுதல் ஏற்பட்டது. பிரதம மந்திரி பட்டத்திலிருந்து நீக்கப்பட்டார் மந்திரி.

அவர் தமது இளங்குமாரியைக் கூட்டிக்கொண்டு காட்டுக்குப்போனுர்; ராஜபவனத்திலிருந்து மன்னனுக்கு வரும் பொருள் உரைக்கும் மந்திரி ராக்ஷஸர்களாலும், கொடிய காட்டுமிருகங்களாலும் நிறைந்த அடவியில் இருந்து தன் மகளுக்கு ஹிதோபதேசம் செய்து வந்தார்.

மந்திரியின் மாளிகை ஒரு ஆற்றங்கரையோரமாக இருந்தது. இளவரசன் ஒரு நாள் அந்தக்கரை யோரமாக உலாவச் சென்றுன். மந்திரி மகளும்அங்கு காற்று வாங்கிக்கொண்டு, இயற்கையின் அழகைகுறித்துப் பாடிக்கொண்டே இருந்தாள்.

உல்லாசமாய் உலாவிக் கொண்டிருந்த இளவரசனின் கண்கள் அவளைச் சந்தித்தன! அவளைக் கண்ட அவன் உள்ளம் அவளை யணுகி அவளுடன் பேசத் தூண்டிற்று. நடந்தான்; தன்னிஷ்டத்தைத் தெரிவித்தான்.

அதைக்கேட்ட அவள் "எனது விருப்பத்தை நாளை தான் சொல்ல முடியும்" என்று கூறி அவ்விடம் விட்டுச் சென்றுள்.

அவள் அன்ன நடையைக் கண்ணுரக் கண்ட இளவர



சன் தன்னிருப்பிடம் செல்லாமல் நின்றுன்.

மந்திரி குமாரிக்கு நித்திரை வரவில்லை. நட்சத்திரங்களை எண்ணியெண்ணி அவள் அன்றிரவைக் கழித்தாள், ராஜகுமாரனுக்கு என்ன பதில் அளிப்பது? என்று யோசித்துக் கொண்டிருந்தாளென்றுலும், மனப்பூர்வமாக

அவனை மணக்க வேண்டும் என்றே எண்ணியிருந்தாள்.. ஆனல், ... அவன் நடத்தை சரியாக இல்லையே? என்ற கவலை மட்டும் அவளை வேதனைப்படுத்திக்கொண்டு இருந்தது

இருள் நீங்கிற்று. சூரியன் யுதிக்கும் தருணத்தில் அவளுக்கு ஒரு யுக்தி பிறந்தது. 'அவனை மணந்து நல்வழிக்குக் கொண்டு வர வேண்டும்' என்று உறுதி கொண்டாள்.

அந்திப் பொழுது வந்தது. அரசன் அவள் அபிப்பிராயம் அறிய வந்தான். மந்திரி குமாரியும் மந்த ஹாஸத்து



ன் அங்கு தோன்றி அவனை அன்புடன் வரவேற்று ஒரு விலையுயர்ந்த முத்தை அவன் கையில்கொடுத்து:—"நீங்கள் இந்த முத்தின் ரகசியத்தை சொல்வீர்களானல், நான் தங்கள் அடியாளாகத் தயார்" என்ருள்.

ராஜ குமாரன் மறு வார்த்தை பேசாது அம்முத்தை எடுத்துக்கொண்டு அரண்மனைக்குப் போனன்.

அதன் பின்,...? அந்நாளிலிருந்து அவன் மூளை அந்த முத்தின் ரகசியமறியத் தலைப்பட்டுவிட்டது. இரவு பகலாய் அவன் அதன் மர்மத்தை அறியத் தொடங்கினன்—சிந்தனை வேறென்றிலும் செல்லவில்லை...அதனல்

அவன் கொடிய பழக்க வழக்கங்கள் பொடிபட்டன!

ஒரு நாள் ஒரு ஸாது அவனிடம் வந்தார். அவன் சோகமாக இருப்பதைக் கண்ட அவர்:—"குழந்தாய்! நீ ஏன் கவலையுள்ளவனாகக் காணப்படுகிறாய்?" என்று கேட்டார்.

ராஜபுத்திரன்:—முனிபுங்கவரே! நான் ஒரு நாரிமணியை மணம் செய்துகொள்ள



விரும்புகிறேன். ஆனால் அவள் என்னிடம் இந்த முத்தைக் கொடுத்து 'இதன் ரகசியம் என்னவென்று சொன்னால் தான் தன்னை மணக்கலாம்' என்று சொல்லிவிட்டாள். எனக்கிதன் மர்மம் யாதென்றறிய இயலவில்லை. ஆதலின்,...தாங்கள் இதன் ரகசியத்தைத் தெரிவித்தல் வேண்டும்" என்று வேண்டினான். சாது அம் முத்தைக் கையில் எடுத்துக்கொண்டு:—"அன்பா! சுத்தமான நீர்த்துளியே இதன் வடிவம். அதுபோல் பெருங்குடியில் பிறந்த நீயும் உன் வாழ்க்கையைத் தூய்மையாக வைத்துக்கொண்டால் அவளை நீ அடையலாம்; பிறவியின் பயனைப் பெற்றவனாகலாம். இதுதான் இதன் ரகசியம்! என்றார்.

அந்நாளிலிருந்து அவன் தனது வாழ்க்கையைத் திருத்திக்கொண்டான். தீமைகள் நீங்கின; நன்மை நடமாடிற்று மந்திரிகுமாரி அவனது மனைவியானாள்; மாஜி மந்திரியும் ராஜ்ய காரியத்தில் பங்கெடுத்துக் கொண்டார்.

வையத்து மாந்தரெல்லாம் அவர்களை வாழ்த்தி வணங்கினார்கள்.

# குமாஸ்தாக்கள்

★ ராயல் இந்தியன் கடற்படையில் ரைட்டர்களுக்கும், (இந்தியன் தரைப்படை குமாஸ்தாக்கள் பகுதி உட்பட) இந்தியன் தரைப்படையிலும் ராயல் இந்தியன் ஆகாயப்படையிலும் குமாஸ்தாக்களுக்கும் உத்தியோகங்கள் காலியுள்ளன.

## பெறுமதியுடைய பயிற்சி

இவ்வுத்தியோகங்கள் எதிலும் சரி, நீங்கள் பெறும் அனுபவஞானமும் பயிற்சியும் யுத்த பிற்காலம் இந்தியன் வர்த்தகத்துக்கு கட்டாயம் மிகவும் பயன் படும்.

நல்ல சம்பளம்
பூராச்சம்பளத்துடன் ரஜா
இலவச உணவு
இலவச உடைகள்
இலவச இடவசதி
இலவச சிகிச்சை

இந்த உத்தியோகங்களுக்குத் தகுதியுற என்னென்ன யோக்கியதாம்சங்கள் தேவையென்பது பற்றியும் மற்றபடி பூரா விவரங்களுக்கும் கீழ் வரைந்துள்ள ஆபீஸுகளில் உங்களுக்கு மிகவும் அருகிலுள்ள ஆபீஸுக்கு எழுதவும்.

மதராஸ் — புதுப்பேட்டை லைன்கள், மவுண்ட்ரோட் P. O.
பெங்களூர் ... அப்பன் ரோட் | பெஜவாடா... பந்தர் ரோட்.
திருச்சினாப்பள்ளி ... மதுரை ரோட் | வேலூர் ... 15 ஆபீஸர்ஸ் லைன்கள்
மைசூர் ... காந்தி ஸ்கொயர்

# 'ஜம்பகா' பிரயாணம்

( எஸ். ஜே. )

இந்தக் கோடை லீவுக்கு எந்த ஊருக்குப் போவது என்று யோசித்து எனக்கு மண்டை குழம்பி விட்டது. எனக்குத் தெரிந்தவர்கள் இருந்த எல்லா ஊர்களும் சுத்த பட்டிக்காடுகள். அங்கு பொழுது போவது மகா கடினம். அந்தக் கிராமங்களில் சிலவற்றைப்பற்றி நினைத்தால் எனக்கு இப்பொழுதுகூட பயமாக இருக்கிறது. மத்தியான வெயிலில் வீடெல்லாம் பற்றி எரிவது போல் இருக்கும். குளம் குட்டைகளில் சொட்டுஜலம் கூட இல்லாமல் வெடிப்புகள் ஏற்பட்டிருக்கும். மத்தியானமெல்லாம் தூங்கித் தொலைக்க வேண்டியிருக்கும்; ஆனால் தூக்கமும் வராது.

இவ்விதமாக நான் மூளையைக் குழப்பிக்கொண்டிருந்த சமயத்தில் சமயசஞ்சீவி போல் நாராயணன் வந்து சேர்ந்தான். அவனுடன் எங்கள் ஊர் 'மைனர்' (ஸ்ரீவத்ஸ செட்டியாரின் ஒரே மகன்) குருசாமியும் வந்தான். நான் பேச ஆரம்பிப்பதற்குள் நாராயணனே பேச்சைத்துவக்கினான்.

''கிட்டு! நம்ப மைனர் ஒரு சுற்றுப்பிரயாணம் போகத் திட்டம் போட்டிருந்தார். தலைக்கு இருபது ரூபாய் எடுத்துக்கொண்டு வரவேண்டியது. மைனர் வீட்டு பிளஷர்கார் 'ஜம்பகா' இருக்கவே இருக்கிறது. நம்ம சிநேகிதர்கள் நான்கு பேர்களுடன் ஜோராகக் கிளம்பி பதினைந்து நாள் சுற்றிவிட்டு வரலாம்.''

நாராயணன் வாயில் அநேகமாக நிஜமே வராது. ஆகையால் அவன் சொல்வது உண்மைதானா என்று கேட்கும் பாவனையில் குருசாமியின் முகத்தைப் பார்த்தேன்.

''ஆமாம், கிட்டு! நாராயணன் சொல்றது உண்மைதான். ...ளன்றைக்குக் காலை இங்கி...து கிளம்பி விடுவோம்'' என்று ...ாமி சொன்னவுடன் என் ...கம் தீர்ந்தது.

... 13-ந்தேதி நாங்கள் ... சுற்றுப்பிரயா...ம். பிரயா...வர்கள் மொத்தம் ஐந்து பேர். குருசாமி நாராயணன், ரங்கராஜன், மைனர் வீட்டு வேலைக்காரன், நான்.

டிரைவரை வரவேண்டாமென்று குருசாமி தடுத்துவிட்டான். எங்களுக்கும் அவனுடைய மோட்டார் ஓட்டும் திறமையில் கொஞ்சம் நம்பிக்கையிருந்ததால் சும்மாயிருந்துவிட்டோம்.

'ஜம்பகா'வின் ஸ்டீரிங் சக்கரத்தில் மைனர் கைவைத்த மாத்திரத்தில் நாங்கள் ஸ்வர்க்க லோகம் போவது போல் அவ்வளவு சந்தோஷப்பட்டோம். (உண்மையில் ஸ்வர்க்கத்துக்குப் போகும்போது ஏதாவது சந்தோஷம் ஏற்படுமா என்று எனக்குத் தெரியாது. நான் எப்பொழுதாவது அங்கு போனதாகவும் எனக்கு ஞாபகமில்லை)

எங்களைத் தடுக்க யாருமில்லை. நாங்கள் எங்கள் இஷ்டத்துக்கு விடப்பட்டிருந்தோம். பூர்ண சுதந்திரம்! அதனுடைய இன்பங்களில் நாங்கள் மிதந்து கொண்டிருந்தோம். எங்களுக்குப் பிரியமான இடங்களிலெல்லாம் காரை நிறுத்திவிட்டுச் சுற்றினோம்.

எங்களுடன் வந்த வேலைக்காரனுக்கு நடுத்தர வயது இருக்கும். எல்லோருடனும் கலகலப்பாய்ப் பேசிச் சிரிப்பும் விளையாட்டுமாய் இருந்தான். ஆனால் குருசாமி பாடுதான் கொஞ்சம் கஷ்டமாயிருந்தது. வேலைக்காரனுக்கு எதிரில் சிகரெட் ஊத அவனுக்குப் பயம். அவன் போய்ச் செட்டியாரிடம் சொல்லித் தொலைத்தால்......? அதற்காக வேலைக்காரனிடம், ''கொஞ்சம் அந்தக் குளத்தங்கரைப் பக்கம் போய்ட்டு வறேன்'' என்று சொல்லி விட்டுப் போய் விடுவான். அடிக்கடி இந்தச் சாக்கைக் கொண்டு அவன் செல்வதைப் பார்த்து, ''சின்ன யசமான் சும்மா அலையாதீங்க உடம்பு கெட்டுப் போயிடும்'' என்று வேலைக்கார்ன் நைஸாகப் புத்திமதி சொன்னான்.

எங்கள் சுற்றுப் பிரயாணம் துவக்கிய நான்காவது நாள், காலை ஒன்பது மணி இருக்கும்.

நாங்கள் சோலைவனம் என்ற கிராமத்திற்கருகே சென்று கொண்டிருந்தோம். காற்று ஜிலு, ஜிலு வென்று வீசிக்கொண்டிருந்தது. பூதாகாரமான விருக்ஷங்கள் திடீர் திடீரென்று தோன்றி மறைந்தன; நாங்கள் சென்று கொண்டிருந்த ரஸ்தா கப்பி போடாமல் இருந்தாலும், குண்டும் குழியுமாக இருந்தாலும் சற்று சிரமப்பட்டுத்தான் ஓட்ட வேண்டியிருந்தது

ரஸ்தாவின் இடது பக்கத்தில் சற்று தூரத்தில் ஒரு காளி கோவில் போல் காணப்பட்டது. அதன் அருகில் மண்ணால்செய்யப்பட்டபல கோரமான உருவங்கள் நிறுத்தப்பட்டிருந்தன. அந்தக் கோவிலுக்கு எதிரில் வண்டி சென்றபோது 'படார்' என்ற வெடி சப்தத்துடன் டயர் வெடித்து விட்டது. அந்தக் காளி கோயிலைக் கண்டவுடனேயே எங்களுடன் வந்த வேலைக்காரனுக்கு ஒரு விசித்திரமான பயமும், பக்தியும் ஏற்பட்டன. அந்தக் கோயிலுக்கு எதிரில் டயர் வெடித்தவுடன் அவனுடைய மூட பக்தியால் ஏற்பட்ட பயம் பன்மடங்கு அதிகரித்தது.

''காளியாத்தாளுக்கு நம்ப மேலே போறத்துலே இஷ்டமில்லே போல இருக்கு!'' என்று கோவிலைப் பார்த்த வண்ணம் கைகூப்பிக் கொண்டு சொன்னான்.

''புது டயரை எடுத்து மாட்டிட்டா காளியாத்தா அனுமதி கொடுத்துடுவா'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான் குருசாமி. (நல்ல வேளையாகக் கையோடு ஒரு டயர் கொண்டு வந்திருந்தான்.)

''சரி! டயர்தான் வெடித்து விட்டது, காரை அப்படியே போட்டுவிட்டு இந்தப் பிராந்தியத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருவோம்'' என்று நான் சொன்னவுடன் மற்றவர்கள் உடனே கிளம்பினார்கள். வேலைக்காரனை மட்டும் 'ஜம்பகா'வுக்குக் காவலாக வைத்துவிட்டுச் சென்றோம்.

நாங்கள் அந்தப் பக்கத்தில் கால் மணி நேரத்துக்குமேல் சுற்றியும் ஒரு ஜீவன்கூட எங்கள் கண்ணில் படவில்லை. கடைசியாக ஒரு கிழவனைக் கண்டோம்.

"யசமாங்க, எந்த ஊரு? இங்கே என்ன பாக்கிறீங்க?" என்று கேட்டவன், சற்று யோசித்துவிட்டு, "ஓகோ! கறுப்பய்யன் கொலையைப்பத்தி சோதனை செய்ய வந்திருக்கிங்களா? அதுதானே பார்த்தேன்-என்னடா, இந்தச் சுடுகாட்டு ஊருக்கு யாருவருவாங்கன்னு..." என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான்.

எங்களுக்குத் தூக்கி வாரிப் போட்டது. உடனே எல்லோரும் ஒரு முகமாய், "என்ன சமாசாரம்?" என்று கேட்டோம்.

கிழவன் பிகுபண்ணிக்கொண்டான். "உங்களுக்கு அந்தக் கதையையெல்லாம் சொல்ல எனக்கு நேரமில்லீங்க. கணக்கு புள்ளை ஐயா ஊட்டுக்குப் போவணும். நேரமானா, ஐயா திட்டுவாங்க" என்று சொல்லிவிட்டுக் கிளம்ப ஆரம்பித்தான்.

"சும்மாச் சொல்லு, அப்பா! நேரமானா உன்னைக் காரிலே கொண்டு விட்டுடரோம்" என்று குருசாமி சொன்னவுடன், 'ஆ! காரு கொணாந்திருக்கிங்களா?' என்று ஆச்சரியத்துடன் அந்தக் கிழவன் வாயைப் பிளந்து கண்களை அகலத் திறந்தான்.

"சரி! அப்ப கேளுங்க!" என்று சொல்லிவிட்டுத் தலையில் கட்டியிருந்த முண்டாசை அவிழ்த்து அருகிலிருந்த மரத்தடியில் விரித்து அதன்மீது உட்கார்ந்துகொண்டான்.

"சாமீங்களா! முன்னாடி நீங்க இந்த ஊருக்குவந்ததே தப்புங்க. இது பெரிய பைத்தியக்கார ஊரு. வருசம் ஒரு கொலையாச்சியும் நடக்காமெ போறதில்லே. அந்தாலே சாலை யோரத்திலே ஆத்தா கோவிலு பாத்திங்களா? அந்த ஆத்தாளுக்கு ரத்த வெறி ரொம்ப அதிகம். [இந்த இடத்திலே பக்தி பரவசத்தினால் கண்களை மூடிக்கொண்டு கை கூப்பிவிட்டு, படியில் வைத்திருந்த திருநீறைத் தானும் பூசிக்கொண்டு எங்களிடமும் நீட்டினான்.] ராத்திரி வேளையிலே அந்தப் பக்கத்தாலே ஒரு மனிசன் போயிட்டான்னா ஆத்தா அவனை உறிஞ்சி போட்டுடுவா. மூணு வருஷம் யாரோ ஒரு பரதேசிப் பய அந்தக் கோயில் சந்நிதியிலே ராத்திரி படுத்துக் கிடந்தான். விடியுங்காட்டியும் பாத்தா ஆளு பொணமாயிட்டான்"

இந்த இடத்தில் நாராயணன் குறுக்கிட்டான். "அந்தப் பரதேசியை ஆத்தாதான் உறிஞ்சிட்டான்னு என்னமா சொல்ல முடியும்?"

"நல்லாக் கேட்டீங்க, சாமி! மறு நாளே ஆத்தா வீரையன் மேலே சன்னம் வந்து சொல்லிடிச்சே; லே, பாவி மவனுகளா! ஏண்டா அவன் என் கோவிலு பக்கம் வந்தான், ராத்திரியிலே அதான் அவனை உறிஞ்சுப்போட்டேன்"

"அது கிடக்கட்டும். கறுப்பய்யன் கொலையைப்பத்தி ஏதோ ஆரம்பிச்சயே!" என்று நான் கிழவனுக்கு ஞாபகப்படுத்தினேன்.

பிறகு, கரகரப்பான குரலில், ஒரு ரகசியத்தைச் சொல்ல ஆரம்பித்தான்.

"இந்தச் சுத்து வட்டாரத்திலே மாமுண்டி என்கிற பேரைக் கேட்டா படையும் நடுங்கும்... அந்த மாமுண்டிமவ சிங்காரம் பேருக்குத் தகுந்தாப்பலே அளகாய் இல்லாட்டாலும் சாதாரணமாய் இருப்பா. ஆனா, அவ அளகிலே கறுப்பய்யன் மயங்கிப் போனது ஒரு அற்புதம்தான். காளியாத்தாளாட்டமா குங்குமப் பொட்டும், துந்நூறும் பூசிக்கிட்டு, மொளங்கால் வரைக்குப் சேலை கட்டிக்கிட்டு...

"நீ கதையைச் சொல்லு, அப்பா! சிங்காரத்தை வர்ணித்தது போதும்!"

"சிங்காரத்துக்கும் கறுப்பய்யனுக்கும் ரொம்ப நாளா சிநேகம் இருந்துதுங்க. சாதாரணமா எல்லாருக்கும் இந்த சமாசாரம் தெரியும். ஆருமாமுண்டிகாதுக்கு மட்டும் எட்டலே. மாமுண்டி கிட்டே மட்டும் துணிஞ்சு எந்தப் பயலாச்சியும் இதைச் சொல்லிட்டா...அவன் கழுத்தை மாமுண்டி அங்கேயே திருகிப் போட்டுடுவான்.

"கறுப்பய்யனோடை ஜன்ம சத்துரு செங்கோடன் கறுப்பய்யனைப்பத்தி பேசினாலே அவன் பல்லை நெரிப்பான். அவனை நேரிலே கண்டுட்டான்னா வெட்டுறாப்புலே ஒரு பார்வை பாத்திட்டுப் போவான்.

"ஒரு நாள் ராத்திரி சேரிப் பக்கத்திலே நானும் சில பேரு மாப் பேசிக்கிட்டிருந்தோம். ராத்திரி கிட்டத்தட்ட மணி பன்னிரெண்டு இருக்குங்க. திடீர்னு தொலைதூரத்திலேருந்து ஓலக் குரல் கேட்டிச்சு. 'ஐயோ, காளியாத்தா!'ன்னது ரொம்ப தெளிவாகக் கேட்டிச்சு. நாங்களெல்லாம் அதைக் கேட்டு நடுங்கிப் பூட்டோம்.

"உடனே நானு சில ஆளுங்களை கூப்பிட்டுக்கிட்டு, தீவட்டிங்க கொளுத்திக்கிட்டு, ஓடினோம். காளியாத்தா கோயிலிலேருந்து கூப்பிடுதூரத்திலே கறுப்பய்யன் ரத்தத்திலே மிதந்து கிடந்தான். முதுகிலேருந்து ரத்தம் கொட்டிக்கிட்டே இருந்தது. வாயிலிருந்து 'குபுகுபு'ன்னு ரத்தம் வெளியே வந்துக்கிட்டிருந்தது. எங்களைக் கண்டவுடன் காளிகோவிலு பக்கம் கையைக் காட்டினான். உடனே கண்ணை மூடிட்டான். அப்புறம் அவன் கண்ணைத் திறக்கவேயில்லை. என் கூடவந்தவங்களுக்கு ஒரு சந்தேகம். இது காளியாத்தா கோவில்லே இருக்கிற துர்த்தேவதைகளோட வேலையோன்னு நினைச்சாங்க. எனக்குமட்டும் செங்கோடன் மேலே பலத்த சந்தேகம். அவன்தான் வெகு நாளா கருவிக்கிட்டு இருந்தான். தீத்துக்கிட்டான் வஞ்சத்தை.

"இன்னும் சிலபேரு சொல்லிக்கிறாங்க—மாமுண்டிக்கு சிங்காரத்தோட சமாசாரம் எப்படியோ தெரிஞ்சு அவன்தான் செங்கோடனைத் தூண்டிவிட்டிருக்கான்னு. ஆனா இது சுத்தப் புளுகு. மாமுண்டி பிறத்தியானை விட்டுக் கொலை பண்ணச்சொல்ல அவ்வளவு கோழைப்பய அல்ல. அவன் மட்டும் நினைச்சுட்டான்னா எல்லோர் எதிரிலேயும் கறுப்பய்யனைக் கிழித்துப்போடுவான். அவன் இதுபோல கேவலமான வழிக்கெல்லாம் போவமாட்டான்......"

"கடைசியிலே யாரு கொலை பண்ணினான்னு தெரியவே இல்லையா?"

"அது காளியாத்தாளுக்குத்தான் தெரியும்"

"மேலே?"

"மேலே என்னங்க! ராத்திரி ...வேளையிலே அந்தப் பக்கத்திலே ...கு தினம் அழுகைச் சத்தம் ...து. அது சேரியிலே ...வங்களைத் தூங்கமுடி...யுது. தவிரவும், சேரி...லாம் இந்த சத்தத் ... நடுங்கறாங்க......

...மான்! நானு ... கிழவன் ...ங்களுக்குக் ...மான ...தோம்.

கிழவன் கும்பிடு போட்டுவிட்டுப் போய்விட்டான்.

அன்று மத்தியானம் நாங்கள் "ஜம்பகா"வை நிறுத்தியிருந்த இடத்துக்கு அருகில் உள்ள நிழல் நிறைந்த மணல் வெளியில் உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருந்தோம். அச்சமயம் இரண்டு வாலிபர்கள் அங்கு வந்தனர். எங்களைக் கண்டதும் இருவரும் வணங்கினர்.

'யசமாங்களே! காலையிலே உங்ககிட்டே ஒரு கிழவனார் பேசிண்டு இருந்தாரல்ல?" என்று கேட்டான் ஒருவன்.

"ஆமாம்! அது உனக்கு எப்படித் தெரியும்?" என்றான் நாராயணன்.

"நாங்க பாத்தோமல்ல? அந்த கிழவனாரு என்னா சொன்னார்?"

"அது கிடக்கட்டும். கறுப்பய்யன் கொலையைப்பத்தி உனக்கு எதினாச்சியும் தெரியுமா?" என்று நான் கேட்டவுடன் அவர்கள் இருவரும் வயிற்றைப் பிடித்துக்கொண்டு சிரிக்க ஆரம்பித்தனர்.

"என்னப்பா! என்ன சிரிக்கிறீங்க?

"ஒண்ணுமில்லை. இந்த வட்டாரத்திலே நானு ஒருத்தன்தான் கறுப்பய்யன். என்னை யாரும் கொலை, கிலை பண்ணல்லே. அப்படியிருக்கச்சே கிழவனாரு என்னைக் கொன்னுட்டாரே!"

"என்ன, கறுப்பய்யா? அந்தக் கிழவன் ஏதுக்காக இப்படி நடக்காத கொலையைக் கற்பனை பண்ணிச் சொல்லணும்?" என்று கேட்டேன் நான்.

'ஆ! அப்படிக் கேளுங்க. மாமுண்டியின் இஷ்டத்துக்கு விரோதமா அவர் மவ என்னைக் கட்டிக்கிட்டா. அதிலே அவருக்கு ஏகப்பட்ட ஆத்திரம். இதே காரணமா அவருக்குக் கொஞ்ச நாளிலே பைத்தியம பிடிச்சுப் போச்சு. ஆனா ஆளைப் பாத்தாலோ, பேசினாலோ கூட பைத்தியன்னு லேசிலே கண்டு பிடிக்க முடியாது. அதிலேருந்து இந்த ஊருக்குப் புதிசா வர்ரவங்க ஒவ்வொருத்தர் கிட்டேயும் கறுப்பய்யன் செத்துப் போய்விட்டதாகக் கதை கட்டி விடுகிறார். ஒத்தர் கிட்டே அவன் மேலே ரெயில் ஏறிச் செத்துப் பூட்டான் என்கிறாரு. இன்னொருத்தர்கிட்டே மரத்திலேருந்து தேங்காய் விழுந்து அவன் மண்டை உடைஞ்சிடுச்சி என்கிறாரு. ஒரு சமயம் பேயறைஞ்சிடுச்சி என்கிறாரு"

"அப்படியானால் காலம்பற கதை சொன்ன கிழவன்தான் மாமுண்டின்னு சொல்லு அவன் மவதான் சிங்காரம் என்கிறது."

"ஆமாம், சாமி! ஆமாம்."

"அட பாவிக் கிழவா!"

"இன்னிக் கதையிலே செங்கோடன்தான் கொலை செய்திருப்பான் என்று சொன்னான்" என்றேன் நான்.

கறுப்பய்யன் இடி இடியென்று சிரித்து விட்டு, தன்னோடு வந்தவனின் கையைப் பிடித்துக் கொண்டு, "செங்கோடா! நீயுமா என்னைக் கொலை பண்ணிட்டே!" என்று சொன்னான்.

"அட! நீதானா செங்கோடன்?"

"யசமான்! இவன் என்னோட உயிர்ச் சிநேகிதன். கிழவனாரு கதையிலே என்னோட ஜன்ம சத்ரு வாயிட்டான்"

"பலே, பேஷ்! கிழவா!" என்று கூவினான் குருசாமி.

அன்று சாயந்திரமே நாங்கள் ஜம்பகாவில் பிரயாணமானோம். ஆனால் கிழவன் சொன்ன கதையும, மாமுண்டியும், கறுப்பய்யனும், அந்தப் "பைத்தியக்கார ஊரு"ம் எங்கள் சிந்தனையை விட்டு அகலவேயில்லை.

---



ஸ்ரீ கமலாதேவி ஸ்வாமி

இவர் காலஞ்சென்ற ஆனரபிள் ராம அய்யங்கார் C. S. I. யின் கொள் பேத்தி குடும்ப ஸ்திரீகளில் கச்சேரி செய்ய முன்வந்தவர்களில் ஒருவர். சமீபத்தில் அநேக ஊர்களில் தக்க பக்கவாத்யங்களோடு கச்சேரி செய்வார்.



1940-ம் வருஷம் ஜ
மாதம் மார்ஷல் பிடெ
பிரான்ஸின் பிரதம ம
யாகி ஜெர்மனியிடம் யுத்த
நிறுத்தக் கோரிக்கையை
வெளியிட்டார். பாரிஸில்
ஜெர்மன் தூதராயிருந்த
ஆட்டோ அபெட்ஸுடன்
அவர் கைகுலுக்குகிறார்.



1942-ம் ஆண்டில் ரஷ்ய
ரின் காகஸஸை நோக்கி
ரோமலின் படைகள் முன்
னேறின. ஜெர்மனியின்
ராணுவ பலத்தைக் காட்
டும் அணிவகுப்பு.



பிரிட்டிஷ் யுத்த மந்திரி
சபையிலுள்ளவர்க
படம். சர்ச்சில்.
யோரையும்

